றிக்கே, (௧) 'தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு'' என்கிறபடியே ஶ்ரிய:பதியை விஷயமாக வுடைத்தாய் அதுதான் ததீயபர்யந்தமாயிருக்கிற ஜ்ஞாநத்தையுடையராய், அதுக்குமேல் வறை முந்நூலான ஆர்ஷவசநங்களை த்ருணவத்கரித்து திருமால் வன் கவியான திருவாய்மொழியிலே அவகாஹநத்தையுடையவரா கையாலே, அதைவிட்டு நிரூபிக்கும்படியான வைதிக்யத்தையுடை யரான பிள்ளையினுடைய நிர்ஹேதுக கருணையினாலே, *காமாதி தோஷஹராய யதிகளுக்கு நாதராயிருக்கிற எம்பெருமானார் தம் முடையவழி(ர)மானரூபமாயிருப்பதாய், "ఇదం హి వైష్ణవం పోతం సమ్యగాస్తే భవార్ణవే - இதம்ஹி வைஷ்ணவம் போதம் ஸம்யகாஸ்தே பவார்ணவே'' என்கிறபடியே நிரபாயமான விஷ்ணுபோதம்போன்ற வைஷ்ணவ போதத்தை யாரோஹித்து, "సంసారసాగరం ఘోరం-ஸம்ஸாரஸாகரம் கோரம்' என்று சொல்லப்படுவதான ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத் தைக் கடந்து, (௨)"விண்ணோர்பிரானார் மாசில் மலரடிக்கீழ்" என்றும் (௩) "துயரறுசுடரடி' என்றும் சொல்லுகிறபடியே ஹேயப்ரத்யநீக மாய், நிரவதிகதேஜோரூபமாய், வேறொருப்ராப்யாந்தரத்தை யபே க்ஷிக்கும்படியான கோதின்றிக்கேயிருக்கிற, ஶ்ரிய:பதியினுடைய திருவடிகளாகிற தீர்த்தத்தைக் கிட்டப்பெற்றவன் இது நிச்சயம்

பிராட்டி கடாக்ஷத்துக்கு விஷயமானபின்பு, திருவடி(௪)"రామస్య లోకత్రయనాయకస్య శ్రీపాదమూలం మనసాజగామ-ராமஸ்ய லோகத்ரயநாயகஸ்ய ஸ்ரீபாதமூலம் மனஸா ஜகாம'' என்று அடைந்ததாக வத்யவஸித்ததாயிற்றே (௫) "மானேய் நோக்கி மடவாளை மார்பில் கொண்டாய மாதவா' என்று தொடங்கி "உன் தேனே மலரும் திருப்பாதம்-வினையேன் சேருமாறு நீ அருளாய்'' என்றார்த்திக்க வேண்டிற்றிறே "கோதற்ற மாதவன்'' என்று சொற்றுகையாவது அவனுக்கு விஶேஷண மானபோது பிராட்டியோடே கூடியிருக்கையாலே, திருவில்லாத் கோதற்றவனென்றுமாம், ஶ்ரிய:பதியிறே நித்யப்ராப்யனாவான்

(அ-கை) கீழிரண்டுபாட்டாலும் ஸ்வாசார்ய பரமாசார்யர்களான பிள்ளையுடையவும் எம்பெருமானாருடையவும் அபிமானத்

---

(௧) க திருவ-௬௭ (௨) திருவிரு ௫௪ (௩) தி-வாய்-௧ ௧-௧
(௪) (௫) தி-வாய் ௧-௫ ௫

த்தாலே பெறுதற்பாற்றென்று நிஶ்சயித்து, இப்படி நிஶ்சிதமானபின்பு (க) "வடிவுடை மாதவன்" என்னும்படி புத்தக்கணிப்போடே ஸபரிகரனாய், திவ்யாஸ்தான மண்டபத்திலே திவ்யஸிம்ஹாஸனத்திலே திவ்யமஹிஷீபரிவ்ருதனாயெழுந்தருளியிருக்கிற ஸ்ரீமந்நாராயணனான ஸ்ரீவைகுண்டநாதனைக் கடுக அனுபவிக்கும்படி எனக்கு நாதரான தேவர் பண்ணியருளவேணுமென்கிறார்

அடியார்கள் குழாங்க ளழகோலக்கமிருக்க
ஆனந்தமயமான மாமணிமண்டபத்துப்
படியாதுமில் படுக்கையாயிருக்கு மனந்தன்
பணாமணிகடம்மி னொளிமண்டலத்தி னிடையில்
வடிவாரு மாமலராள் வலவருகுமற்றை
மண்மகளு மாய்மகளு மிடவருகு மிருக்க
நடுவாக வீற்றிருக்கும் நாரணனைக் கடுக
நானநுபவிக்கும் வகை நல்கென்னெதிராசா (௨௩)

என்னெதிராசா = அடியேனுக்கு ஸ்வாமியாய் யதிகளுக்கு நாதரானவரே! அடியார்கள் குழாங்கள் = நித்யமுக்த ப்ருந்தங்கள், (அநந்த கருட விஷ்வக்ஸேந ப்ரமுகரான நித்யவர்க்கமும், பராங்குச பரகால யதிவராதிகள் தொடக்கமான முக்தவர்க்கமும், மணிகளையும் முத்துக்களையும் நிறைத்தாற்போலே) அழகோலக்கமிருக்க = அழகோலக்கமாக வரிசையடைவே ஸேவித்திருக்க, ஆனந்தமயமான மாமணிமண்டபத்து = நிரதிஶயானந்தஜநகமான திருமாமணி மண்டபத்திலே, படியாதுமில் = உபமானமொன்றுமில்லாமலிருப்பதான, படுக்கையாயிருக்கும் = திவ்யபர்யங்கமாயிருக்கும், அநந்தன் = திருவநந்தாழ்வானுடைய, பணாமணிகள் தம்மினொளி மண்டலத்தினிடையில் = பணாரத்நங்களின் தேஜோ மண்டலத்தின் நடுவே, வடிவாரு மாமலராள் = "வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கை" என்கிறபடியே, ஸௌந்தர்யத்தால் மிக்க ஸௌகுமார்யத்தையிட்டு நிரூபிக்கும்படியான பெரியபிராட்டியார், வலவருகு = வலத்துப்பக்கத்திலும், மற்றை மண்மகளுமாய் மகளும் = த்தயரான பூமிப்பிராட்டியும், நீளாதேவியும், இடவருகும் = இடத்துப்பக்கத்திலும், இருக்க = ஸேவித்திருக்க, நடுவாக வீற்றிருக்கும் = இவர்களுக்கு நடுவே மூன்று மின்கொடிகளோடே கூடி தாமரை பூத்ததொரு காளமேகம்போலே *வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல் செல்ல வெழுந்தருளியிருக்கிற, நாரணனை = ஸ்ரீவைகுண்ட

(க)

ஸமுதாயமாயிருப்பதாயிருக்கிற விக்ரஹஸ்தூலஶரீரத்தை உபேக்ஷிப்போட்டு (௧) 'மங்கவொட்டு' என்று த்யஜித்து (௨) "மன்னுங்கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள் அன்னதோரில்லியினூடுபோய்" என்கிறபடியே, அவன் மண்டலத்தைக் கீண்டு அவ்வருகே போய், மற்றும் ஆதிவாஹிகபுருஷர்களாயுண்டானவர்கள் லோகங்களெல்லாங்கடந்து, (௩) இமையோர்வாழ்தனிமுட்டைக் கோட்டையாய், கோடியோஜனமான வளப்பத்தையுடைத்தான அண்டகபாலத்தைப் பேதித்து, அதையொருபடிசத்தித்து, மத்யேயுண்டான தஶோத்தரமான ஆவரணஸப்தகத்தையுங்கடந்து, அவ்வருகே போய் முடிவில் பெரும்பாழான மூலப்ரக்ருதியையுங்கடந்து அத்யந்த ரமணீயமாயிருப்பதாய் விரஜையென்று ப்ரஸித்தமான வந்நதியிலே ஸ்நாநம்பண்ணி, அவ்விடத்திலமானவர் ஸ்பர்ஶத்தாலே (௪) "ஒளிக்கொண்ட சோதியுமாய்" என்னும்படி பஞ்சோபநிஷன்மயமாகையாலே, நிரவதிக தேஜோரூபமான திவ்யவிக்ரஹத்தையும் பெற்று, (௫) "முடியுடைவானவர் முறைமுறையெதிர்கொள்ள" என்கிறபடியே, நித்யஸூரிகள் பூர்ணகும்பத்ர்த்தராய், ப்ரஹ்மாலங்காராதிகளாலே அலங்கரித்து, ஸ்தோத்ரம்பண்ணிக்கொண்டு வழிநடத்தப்போய், ஸ்ரீவைகுண்டமாகிற திவ்யநகரத்தை ப்ரவேஶித்து, பெருந்தெருவாலே யுள்ளே போய், ஆநந்தமயமான திருமாமணிமண்டபத்தைக்கிட்டிச்சென்று, (௪) "அடியார்கள்குழாங்களுடன் கூடுவதென்றுகொலோ!" (௬) மத்தைவதை:பரிஜநைஸ்தவஸங்கிஷீய" என்கிறபடியே, நமக்கு ஸ்வாமிகளாய், ஶ்ரிய:பதியினுடைய திருவடிகளிலே ந்யஸ்தப(ர)ராய், அதுவே நிரூபகமாயிருக்கிற ஸூரிஸங்கங்களுடன் கூடுகிற வந்த திவஸமானது (௭) "குறுகக்கும் வகையுண்டுகொலோ" என்கிறபடியே, அதனை யபேக்ஷிக்கிறவெனக்கு அது ஸமீபமாம் ப்ரகாரமுபகரித்தருளவேணும் இவ்விடத்தில் நல்கல்= கொடுத்தல் (௨௯)

(அ-கை) நீரோ, உம்முடைய வ்யாதம் பாராமல் கனத்தவப் பேற்றை வபேக்ஷியாநின்றீர், அதுக்கு நாம்செய்வதென்னென்று,

---

(௧) தி-வாய்-௧௦-௭-௧௦ (௨) பெரியதிருமடல் (௩) தி-வாய்-௪-௯-௮
(௪) தி-வாய் ௨ ௩-௧௦ (௫) தி-வாய்-௧௦ ௯
(௬) -௭ ௧ (௭) தி-வாய் ௯ ௮-௧

எம்பெருமானார்க்கு நினைவாக, அடியேனை அங்கீகரித்தவன்று தொடங்கி இன்றளவும் வரவடியேனுடைய வபராதங்களையும் பொறுத்து, உபேக்ஷியாதே மோக்ஷத்தையும் கொடுப்பாராக வெண்ணியிருக்கிற தேவர் காலவிளம்பம் பண்ணாமலத்தைச் செய்தருளவேணுமென்கிறார்

என்றுநிரேதுகமாக வென்னையபிமானித்து
யானுமதறிந்துனக்கேயாயிருக்கும் வகைசெய்தாய்
அன்றுமுதலின்றளவு மநவரதம் பிழையே
யடுத்தடுத்துச்செய்வ தனுதவிப்ப தினிச்செய்யேன்
என்றுனை வந்திரப்பதா மென் கொடுமைகண்டு
மிகழாதே யிரவுபக லடிமைகொண்டு போந்தாய்
இன்றுதிருநாடு மெனக்கருள வெண்ணுகின்றாய்
இனிக்கடுக்கச்செய்தருள வேண்டுமெதிராசா (௨௫)

எதிராசா = யதிகளுக்கு நாதரான எம்பெருமானாரே! என்று = எந்த தினத்தில், நிரேதுகமாக = நிர்ஹேதுகமாக-காரணமின்றி, என்னை = அடியேனை, அபிமானித்து = இவன் நம்முடையவனென்றபிமானித்தருளி, யானும் = அடியேனும், அதறிந்து = அந்த அபிமானவிசேஷத்தை யறிந்து, உனக்கே = தேவருக்கே, ஆயிருக்கும் = அநந்யார்ஹ சேஷமாயிருக்கத்தக்க, வகை = ப்ரகாரத்தை, செய்தாய் = செய்தருளினீரோ? அன்றுமுதல் = அந்த தினந்தொடங்கி, இன்றளவும் = இந்நாள்வரையிலும், (பூர்வவாஸனை விடாமல்) அநவரதம் = நிரந்தரம், பிழையே = அபராதமே, அடுத்தடுத்து = இடைவிடாமல், செய்வது = செய்துவிட்டு-இப்படிச்செய்தோமேயென்று, அனுதவிப்பது = அனுதபிப்பது, (அனுதபித்து) இனி = இனிமேல், செய்யேனென்று = செய்யமாட்டேனென்று, உன்னை = தேவரீரை வந்து இரப்பதாம் = வந்து ஆர்த்திப்பதாகிற என் கொடுமைகளையும் = அடியேனுடைய க்ரூரக்ருத்யங்களைக்கடாக்ஷித்தும், இகழாதே = உபேக்ஷியாமல், இரவுபகல் = திவாராத்ரமும், அடிமைகொண்டுபோந்தாய் = தேவர் திருவடிகளில் கைங்கர்யங்கொண்டருளினீர், (இம்மாத்ரமேயல்லாமல்) இன்று = இன்றையதினம், திருநாடும் = பரமபதத்தையும் எனக்கு = அடியேனுக்கு, அருள = க்ருபைசெய்ய, எண்ணுகின்றாய் = திருவுள்ளம் பற்றியருளுகிறீர் (இப்படி அபாரகருணாஸமுத்ரியுடையராகையாலே) இனிக்கடுக்க = இனிசீக்ரமாக, செய்தருளவேணும் = அதை க்ருபை செய்தருளவேணும் (௨௫)

(வ-௧) யதிகளுக்கு நாதரான தேவரீர் வர்த்தமாலை என்று நிர்ஹேதுகமாக, இவன் நம்முடையவனென்று அபிமானித்தருளி அடியேனும் அந்த வபிமானவிசேஷத்தை யறிந்து, தேவர்க்கே அநந்யார்ஹனாயிருக்கும்படி செய்தருளிற்று அப்படியே அபிமானித்தருளினவன்று தொடங்கி தேவர் திருவடிகளை ப்ராபிக்கவிருக்கிற வின்றளவும், நிரந்தரமபராதமே இடைவிடாமல் செய்வது இப்படி அக்ருத்யமானதைச் செய்தோமென்று அநுதபிப்பது இனி இப்படிப்பட்ட வபராதங்களைச் செய்யேனென்று, தேவரை ப்ரார்த்திப்பதாகிற வென்னுடைய கனாகாமங்கண்டு உபேக்ஷியாமல் இங்கும் திவாராத்ரவிபாகமற தேவர் திருவடிகளில் கைங்கர்யம் கொண்டருளினீர் அவ்வளவுமின்றிக்கே இன்றுஸத்துக்களுக்கு க(ம)ந்தவ்யபூமியான திருநாட்டையும் அதுக்கு யோக்யதையில்லாத வெனக்கு ப்ரஸாதிப்பதாக விசாரித்தருளாநின்றீர் இப்படி செய்யவேண்டியற்ற பின்புகாலக்கழிவு செய்யாமல் கடுக்கச் செய்தருளவேணும்

(அ-௩) இவர் தம்மை வங்கீகரித்தவன்று தொடங்கி இன்றளவாக உண்டான வபராதஸஹஸ்ரங்களை யாவிஷ்கரித்தவாறே, நம்மையொழிய வேறொருவர் இவர் குற்றங்களைப் பொறுத்து ரக்ஷிக்க வல்லாருண்டோ? இனி இவர்க்கு மேலுண்டான கார்யமும் நாமே செய்து தலைக்கட்டவேணுமென்று, எம்பெருமானார்க்குத் திருவுள்ளமாக, பா(ஞு)வஜ்ஞராகையாலே அவர்கருத்தறிந்து இப்படி அகதிகளுக்கே கதியாயிருக்கிற தேவரையொழிய, என்னுடைய வபராதங்களைப் பொறுத்து ரக்ஷிக்க, எத்தனை கருணையாளரான பெரியபெருமாள் முதலானார்க்குத்தான் முடியுமோ? இனி ப்ராப்யருசியையு முண்டாக்கி, ப்ராப்யதேசத்திலே சேரும்படி பண்ணியருளவேணுமென்கிறார் அன்றிக்கே அநவரதம் செய்கிற வபராதங்களை *க்ஷமித்து ரக்ஷிக்கும்போது பெரியபெருமாள் முதலானாராகவேண்டாவோ வென்னில்? அது †நமக்கன்றி யாவர்க்கு முடியுமென்கிறாராகவுமாம்

தென்னரங்கர் தமக்காமோ? தேவியர்கட்காமோ?
சேனையர்கோன்முதலான சூரியர்கட்காமோ?
மன்னியசீர்மாறனருள்மாரிதமக்காமோ?
மற்றுமுள்ள தேசிகர்கள் தங்களுக்குமாமோ?

---

†உனக்கின்றி

என்னுடைய பிழைபொறுக்க யாவருக்கும்முடியும்?
எதிராசா வுன்கன்றி யாரொருவர்க்காகேன்
உன்னருளாலெனக்கு ருசிதன்னையுமுண்டாக்கி
ஒளிவிசும்பிலடியேனை யொருப்படுத்துவிரைந்தே (உசு)

எதிராசா = எம்பெருமானாரே! தென்னரங்கர் தமக்காமோ = (அடியேனுடைய அபராதங்களை க்ஷமிக்க) பெரியபெருமாளுக்குத் தான் ஶக்யமோ? தேவியர்கட்காமோ = பெரிய பிராட்டியார் தொடக்கமான நாய்ச்சிமார்களுக்குத் தான் ஶக்யமோ? சேனையர்கோன் = ஸேநாதிபதியாழ்வான், முதலான = தொடக்கமான, சூரியர்கட்காமோ = நித்யஸூரிகளுக்குத் தான் ஶக்யமோ? மன்னிய = நித்யமாயிருக்கிற, சீர் = ஆஶ்ரிதர் விஷயத்தில் வாத்ஸல்யாதி கல்யாண குணங்களையுடையரான, மாறன் = நம்மாழ்வார், அருள்மாரி = சேதனர் விஷயத்தில் கருபையை வர்ஷிக்கிற திருமங்கையாழ்வார், தமக்காமோ = இவர்களுக்குத் தான் ஶக்யமோ? மற்றுமுள்ள = மற்றுமுண்டான தேசிகர்கள் = நாத யாமுநாதிகளான ஆசார்யர்கள், தங்களுக்கு மாமோ = அவர்களுக்குத் தான் ஶக்யமோ? என்னுடைய = அடியேனுடைய, பிழைபொறுக்க = அபராதங்களை ஸஹிக்க, யாவருக்குமுடியும் = எவர்களுக்குத் தான் ஶக்யமாகும்? உனக்கன்றி = தேவரீருக்கன்றி, யான் = அடியேன், ஒருவர்க்காகேன் = மற்றொருவர்க்குச் சேஷபூதனாகேன், உன்னருளால் = தேவருடைய கருபையாலே, எனக்கு = அடியேனுக்கு, ருசிதன்னையுமுண்டாக்கி = பராப்ய ருசியையும் விளைத்து, ஒளிவிசும்பில் = நிரவதிக தேஜோரூபமான பரமபதத்தில், அடியேனை = தாஸனை, விரைந்து = அதிஶீக்ரமாக, ஒருப்படுத்து = சேர்த்தருளவேணுமெ ஏ = பாதபூரணம்

(வ-ம) யதிகளுக்கு நாதரானவரே! ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான ஸர்வேஶ்வரனாலும் பரிகணித்து முடியாத அடியேனுடைய வபராதங்களை க்ஷமிக்க "தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் - தோஷா யத்யபி தஸ்ய ஸ்யாத்" என்றும், (க) "என்னடியார் அதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தார்" என்று பேசும்படியான பெரியபெருமாளுக்குத் தான் ஶக்யமோ? அவர்க்கும் பொறைக்குவர்த்தராய (உ) 'ந கஶ்சிந் நாபராத்யதி - நகஶ்சிந்நாபராத்யதி" என்றும் (௩) "க்ஷமேத ஸ்ந்ந தோஷ: க்வ ஹ்ரீஜனகி - கிமேத நிர்தோஷ: க இஹ ஜகதி" என்றும் பேசும்படியான பெரியபிராட்டியார் தொடக்கமான நாய்ச்சிமார்களுக்குத் தான் ஶக்யமோ? இப்படியான இவர்களிருவருடையவும் 'சோதந்தியிலடிமையை ஆசைப

(க) பெரி-தி-ச க உ (உ) ரா-யு கக௫ சச (௩) ஶ்ரீகுணரத்ந

படடவாகளுககுஅநத கைஙகாய போகபாகிகளாமபடி (௧) "அஜ்ஞ் ஞிஸ்ஸ்ரீஹ்வஷ் - அஸமாபிஸதுலயோபலது" எனறு கூடடிககொள ளுமே ஸ்ரீஸேநாபதியாழவான துடககமான நிதயஸூரிகளுககுத தானஙகயமோ ? இவாகள தான விஷவகஸேநஸமஹிதை விஹ கேநதிரஸமஹிதைகளிலே பரபததிமாாகக பரதாஙகரிறே நிதய மாயப பொருநதியிருபபதான ஆஙரிதவிஷய வாதஸலயாதிகுண யுகதாாய, அதனை யநுஷடாநஙோஷமாமபடி (௨)*பயனனறாகிலும பாஙகலலாாகிலும செயல நனறாகத திருததிப பணிகொளளுமே நம மாழவாா, இவரோபாதி சேதநவிஷயததிலே, கருணையைவாஷிககிற திருமஙகையாழவாா இவாகளுககுத தானஙகயமோ? மறறுமாழ வாாகள கருணைககு விஷயமாய, கருபாமாதர பரஸநநாசாாயாகளா யிருககிற நாதயாமுநாதிகளாயிருககிற லவாகள துடககமாக இவவ ருககுளள வாசாாயகளுககுததான ஙகயமோ? அபராதஸஹரான தேவாகளொழியக கீழுகதரான வெதநனை யதிஙயிததயாவானகளா னாககுத தானிததைசசெயது தலைககடடபபோமோ? அது ஒருவ ருககும அஙகயமாகையாலே (௩) "நிகரினறிநினறவெனனீசைதகு நினனருளினகணனறிப புகலொனறுமிலலை" எனகிறபடியே தயைக விநதுவாய, ஸாவாபராதஸஹராயிருககிற தேவாகளொழிய, அபரா தாஙாமாலயனுன நாஙகாகததைபபோலே வேறொரு கோஷடிககா ளாகேன—

உபாயதசையில ரகஷிததவோபாதி, உபேயதசையிலும தேவா் கருணையாலே பராபயருசியையும விளைதது, (௪) "சுடரொளியாய நினறதனனுடைசசோதி" எனறும, (௫) "தெளிவிசுமபு" எனறும் சொலலபபடுகிற பராபயதேசததிலே அடியேனை (௬) "அஙகுறறே னலலேன" எனனுமபடி ஆநதராளிகளுக விடடுவையாமல சீககிர மாக வொருதலைபபிததருளவேணுமே ஒருகோடியில சோககவேணு மெனறபடி. உனககனறி எனகிறவிததை கீழுமமேலும கூடடி நிாவஹிபபது ஒருவேளையிலே, "கஷிபாமி" "நகஷமாமி" எனனும நிரஙகுஙஸவதநதரனுககும, "ஞ்ஞமாலஹ்ரூஹ்ஜ்ஜ் ஸக்லக்ரண்ஸ்ரூதனமது-

(௧) ரா-யு-கஅ-௩அ (௨) கணணி-௧௦, (௩) இரா-நூ-
(௪) தி-வாய-௩-௧௦-௫ (௫) தி-வாய-௯-௭ ௫ (௬) தி-வாய ௫-௭-௨

க்ஷமாலக்ஷ்மீபருங்கீஸ்ஸகலகாஞ்ஞோன்மாத்தமத்து" என்றும், (க) "திமிர் கொண்டாலொத்துநிற்கும்" என்றும் பேசும்படி உந்மஸ்தசமான போகத்தாலே மத்தத்துஸ்தப்தைகளாயிருக்கு மவர்களுக்கும், அச் சோத்தியிலேகைங்கர்யநித்யநிரதராய், அஸ்தாநபயசங்காக்ஷாவயஸ் நிகளாய், *ஆங்காரவாரமதுகேட் டுழலுமிழுமவர்களாயிருக்குமவர் களுக்கும் அச்சோத்தியைப் புருபவிக்கவாசைப்பட்டு(உ)"சிந்தைகலங் கித்திருமாலென்றழைப்பன்" என்றும்,(ங) உன்னைக்காணுமவாவில் வீழ்ந்து"என்றும்,(ச)"உன்னைக்காணுமாசையென்னும் கடலில்வீழ் ந்து" என்றும், பக்திபாரவஶ்யத்தாலே ஆழ்ங்காலபட்டிருக்குமவர் களுக்கும், மற்றும் கருத்தைக்ருத்யராயாகஉகை விடுமபொழுதையும், மாக வைகுந்தம்காண்கையையும் மநோரதிக்கிறமுமுக்ஷுக்களுக்கும்,ஸ்ர் வத்ராபராநர்த்தங்கண்டு பரோபதேஶம் பண்ணுகைகூடாதிறே' தம் மை அழியமாறியும் ஸம்ஸாரிகள் தூக்கத்திகள்கண்டு*அவர்பின்பட ருமதுணையுயஆ்வர்கள் அவிதேயதைப்பாராமல்,ஸர்வத்ரபரோப தேஶம்பண்ணியும் அதுகாலே,*ஆனுமாளாரெனகிறவனுடையத்தனி மைதீரும்படி மங்களாஶாஸநபரரை யுண்டாக்கி பாஸமருத்தியே பெறும்படி நடத்திக்கொண்டு போருவரொருவராகையாலே இவர்க் கேயாயத்தித்து கூடுவது, (ரு)"அதுதிருக்தலாவதே" என்று கைவிட் டதைப்பிறே கைக்கொண்டு திருத்தி *திருமகள்கேள்வனுக்காக்கிய ருளிற்று ஆகையிறே இவருமிப்படியருளிச்செய்தது, (சு) "மருள் கொண்டிளைக்கும் நமக்குநெஞ்சே யிராமாநுசன்செய்யும் சேமங்கள் மற்றுள்ளாரதரமோ" என்றிறே அமுதனாரு மருளிச்செய்தது "பரம்வத்தரீயாம்ஸஃ- பரமந்தக்ரீயாஸ்மம்" இத்யாதி (உசு)

(அ-கை) இவர் "ஒளிவிசும்பிலடியேனை ஒருப்படுத்துவிரைந் தே" என்றவநந்தரம் அவரும், (எ) "வானேதருவானெனக்காய்" என்றும்படி யோக்ஷபரதாநத்திலே ஸ்தவராயிருக்கிறபடியை ஸா க்ஷாத்கரித்து, இனி த்யாஜ்யமான லீலாவிபூதியிலுண்டான தடங்களு மநுபாதேயமாய், ப்ராப்யமான நித்யவிபூதியிலுண்டான தடங்களும் உபாதேயமாயற்றபின்பு,அவற்றின் விஸ்மரணரூ ஸ்மரணங்களான க்ருத்யாக்ருத்யங்களைத் தமக்கு விதேயமான திருவுள்ளத்தைக் குறித்து விதிக்கருளுகிறார்

(க) தி-வாய்-சுரு-உ (உ) தி-வாய்-சு-அ-க0 (ங) தி-வாய் ரு-எ-ங
(ச) தி-மொ-ச-சு ங (ரு) பெரியதி-உ-ரு (சு) இரா-நூ- (எ) தி-வாய்-க0-அ-ரு

இவ்வுலகில் இனியொன்று மெண்ணாதே நெஞ்சே!
இரவுபகல் எதிராசர் எமக்கினிமேலருளும்
அவ்வுலகை யலர்மகள்கோ னங்கிருக்கு மிருப்பை
யடியார்கள் குழாங்கடமை யவர்களநுபவத்தை
இவ்வுயிருமதுக்கிடப்பிறந்திழந்துகிடந்த
தென்னுமதனையென்று மதுக்கிடைச்சுவராய்க்கிடக்கும்
வெவ்வினையால் வந்தவுடல் விடும்பொழுதை விட்டால்
விளையுமின்பந்தன்னை முற்றும்விடாமலிருந்தெண்ணே

நெஞ்சே = மநஸ்ஸே, இவ்வுலகில் = இந்த லோகத்தில், இனியொன்றும் = இனியொன்றையும், எண்ணாதே = சிந்தியாதே, இரவு பகல் = இராப்பகலும், எதிராசர் = எம்பெருமானார், எமக்கு = நமக்கு, இனிமேலருளும் = இனிமேல் ப்ரஸாதிக்கும், அவ்வுலகை = வானுலகான அந்தலோகத்தையும், அலர்மகள்கோன் = புஷ்பவாஸினியான பெரியபிராட்டியார்க்கு வல்லபனான ஸர்வேச்வரன், அங்கு = அந்தப் பரமபதத்தில், இருக்குமிருப்பை = திவ்யஸிம்ஹாஸநத்திலே எழுந்தருளியிருக்குமிருப்பையும், அடியார்கள் = நித்யஸூரிகளுடைய, குழாங்கடமை = ஸமூஹங்களையும், அவர்கள் அநுபவத்தை = அவர்களுடைய ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டநுபவிக்கும் அநுபவத்தையும், இவ்வுயிரும் = இந்த ஆத்மவஸ்துவும், அதுக்கு = அந்தபோகத்துக்கு, இடப்பிறந்து = ப்ராப்தனாயன்று, இழந்துகிடந்தது = அத்தைப் போக்கடித்துக்கொண்டு கிடந்தது, என்னுமதனை = என்று சொல்லுமதையும், என்றும் = எக்காலமும், அதுக்கிடைச்சுவராய்க்கிடக்கும் = அந்த அநுபவத்துக்கு ப்ரதிபந்தகமாய்க் கிடக்கும், வெவ்வினையால் = க்ரூரகர்மங்களால், வந்த = உண்டான, உடல் விடும்பொழுதை = தேஹவிமோசநமாகும் காலத்தையும், விட்டால் = அந்ததேஹத்தை விட்டபிறகு, விளையும் = பலிக்கும், இன்பந்தன்னை = நிரதிசயாநந்தத்தையும், முற்றும் = இந்தஸமஸ்த விஷயங்களையும், விடாமலிருந்து = இடைவிடாமலிருந்து, எண்ணு = சிந்தித்துப்போரு (௨௭)

(வ-ம்) பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவான மநஸ்ஸே! "ஶ்ரத்தோபாஸநே ச த்யக்த ஸர்வேதரஸ்ப்ருஹ:-அத தேஹாவஸாநே ச த்யக்த ஸர்வேதரஸ்ப்ருஹ:" என்கிறபடியே இந்தக் கொடுவுலகில் ஹேயமாயிருப்பதான ப்ராக்ருதங்களெல்லாம் த்யாஜ்யமென்று தேறியறிந்த பின்பு அல்பாஸ்திரத்வாதி தோஷதுஷ்டமானவற்றிலே லேசதேஶமும் அங்கீகாரயோக்யமாக விசாரியாதே, எம்பெருமானார் நமக்கு ப்ராப்யருசியையுமுண்டாக்கியருளி,

இனிமேல் வருங்கொடைப்பாக வருணம் வானுலகானவந்த லோகத்தையும், அந்த லோகமெல்லாம் நிறம்பெறும்படி (க)“எழில்மலர்மாதருந் தானு மிவ்வேழுலகை இன்பம்பயக்க வினிதுடன்வீற்றிருந்து” என்கிறபடியே புஷ்பத்தில் பரிமளம் வடிவுகொண்டாப்போலேயிருக்கிற பெரியபிராட்டியாருக்கு வல்லபனான வ்யாவ்ருத்தி தோற்றவங்கே திவ்யஸிம்ஹாஸநத்திலே எழுந்தருளியிருக்குமிருப்பையும்,

அச்சோதத்தியிலே அடிமைசெய்கிற (உ)“அடியார்கள் குழாங்களை” என்கிற ப்ராப்யமானவர்கள் ஸமூஹத்தனையும், அவர்கள் ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டநுபவிக்கு மநுபவத்தையும், இவ்வாத்மாவும் அதுக்கு ப்ராப்தனாய்வைத்து அதை இழந்துகிடந்த தென்கிறவவற்றையும், அத்யாபி அந்த அநுபவத்துக்கு ப்ரதிபந்தகமாய்க் கிடக்கும் (௩) “பொல்லாவொழுக்குமழுக்குடம்பும்” என்கிறபடியே கர்மத்தாலே யுண்டான தேஹவிமோசனமாங்காலத்தையும், தேஹவிமோசநாநந்தரம் பலிக்கும் நிரதிஸயாநந்தத்தையும் இப்படி யுக்தங்களாய ஸ்வரூபாநுரூபமாயுள்ளவை யெல்லாவற்றையும் திவாராத்ரவிபாக (ஸாம) மறயிடைவிடாமல் ஒருப்படியிருந்து சிந்தித்துப்போரு அன்றிக்கே உக்தங்களான வவற்றிலொன்றும் விடாமலொருப்படியிருந்து சிந்தித்தென்னவுமாம் “இவ்வுலகினினி யொன்றுமெண்ணாதே” என்கிற இதுக்கு (௪) “மருளொழி நீ” என்று சொல்லுகிற அந்திமதஸா விரோதியான அர்ச்சாவதார ப்ராவண்யமாகவுமாம் (௨௭)

(அ-கை) செய்ததெல்லாஞ் செய்தும் இது நெடுங்காலமில்லாத ப்ராப்யருசி இப்போது எம்பெருமானுடைய க்ருபையாலே உண்டாயிற்றென்று அந்தலாபத்தைப்பேசி அநுபவிக்கிறார்

பண்டுபல வாரியரும் பாருலகோருய்யப்
பரிவுடனே செய்தருளும் பலகலைகடம்மைக்
கண்டதெல்லாமெழுதி யவைகற்றிருந்தும் பிறர்க்குக்
காதலுடன் கற்பித்துங் காலத்தைக் கழித்தேன்

(க) தி-வாய்-௭-௧௦-௧. (உ) தி-வாய்-௨-௩-௧௦
(௩) திருவி-௧ (௪) தி-வாய்-௧௦-௬-௧.

புணடரீகைகேளவனுறை பொனனுலகுதனனில
போகநினைவொனறுமினறிப பொருநதியிஙகேயிருநதேன
எணடிசையுமேததுமெதிராசனருளாலே
எழிலவிசுமபையனறி யிபபோதெனமனமெணணாதே

பணடு=பூாவகாலததில, பலவாரியரும = ஆததமோஜஜீவநததபராரா யிருககிற பூாவாசாாயாகளனைவரும, (ஏககணடமாய) பாருலகோருயய = இநதப பூலோகததிலுணடான ஸமஸத சேதநாகளுமுஜஜீவிகக, பரிவுட னே= இவாகளிடததிலுணடான பரேமையினாலே, செயதருளும = அரு ளிசசெயத, பலகலைகள தமமை=பலபரபநதஙகளை, கணடதெலலாம= பாாததெலலாம, எழுதி=லிகிதது, அவை=அவறறை, கறறிருநதும= ஆசாாயமுகததாலே யபயஸிததிருநதும, பிறாககு = அநயருககு, காதலு டன = பரேமையோடு, கறபிததும = போதிததும, காலததைக கழித தேன=காலததைப போககினேன, புணடரீகை கேளவன=நளிநவாஸி நியான பெரியபிராட்டியாாககு வலலபனானவன, உறை = நிதயவாஸம பணணுகிற, பொனனுலகுதனனில = நிதயவிபூதியான பரமபதததுககு, போகநினைவொனறுமினறி = போகவேணுமெனகிற ஸமரணலேசமுமில லாமல, பொருநதியிஙகே யிருநதேன = இவவிபூதியில ஆசையுளளவனாய வஸிததேன, எணடிசையும = அஷடதிககிலுணடானவாகளும, ஏததும = தன வைபவததைசசொலலி ஸதோததரம பணணுமபடியான, எதிரா சன = எமபெருமானாருடைய, அருளாலே = கருபையாலே, எழிலவிசும பையனறி=விலக்ஷணமான பரமாகாசததைகயே யொழிய, வேறொனறை இபபோதெனமனமெணணாதே= இபபோதென மநஸஸானது ஸமரியாது

(வ-ம) நலலடிககாலமான பூாவகாலததிலே, ஆததமோஜஜீவந ததபராராயிருககிற பூாவாசாாயாகளனைவருமேககணடமாய, இநத பூலோகததிலுணடான ஸமஸதசேதநரு முஜஜீவிகக, இவாகளிடத தில ஸஸநேஹமாகச செயதருளும பலபரபநதஙகளதனனை(க)"தெ ரிததெழுதி" இதயாதிபபடியே, ஆதராதிசயததாலே தேடிககண டவைகளெலலாவறறையும லிகிதது அததை ஆசாாயமுகததாலே அபயஸிதது, தநநிஷடனாயிருநதும, இநநிஷடையிலலாதவநயரும தநநிஷடரா யுஜஜீவிககுமபடி, அவாகளுககு ஆதரததோடே அபய ஸிபபிததும, காலக்ஷேபமபணணினேன, (உ)"தாமரையாள கேள வன" எனனுமபடி பெரியபிராட்டியாாககு வலலபனானவன, நிதய

(க) ச திருவ கக (உ) க-திருவ சஎ

வாஸம்பண்ணுகிற ஸ்பருஹணீயமான ஸ்ரீவைகுண்டத்தில் போக வேணுமென்கிற ஸ்மரணலேசமுமின்றிக்கே இவ்விபூதியிலே ஸக்தனாய் வஸித்தேன்

(௪) *திசையனைத்துமேறுங்குணனை யாலே அஷ்டதிக்கிலுண்டானவர்களும் தன் வைபவத்தைச் சொல்லி ஸ்தோத்ரம்பண்ணும்படியான எம்பெருமானாருடைய கருணையாலே விலக்ஷணமான பரமாகாஶத்தையேயொழிய, இப்போதென்னுடைய மநஸ்ஸானது ஸ்மரியாது இதொரு க்ருபாவிஶேஷமிருந்தபடி என்? என்று கருத்து, இவ்விடத்திலேகாரந்தேற்றத்தில்- (௨௮)

(அ-கை) இனித் தம்முடைய ப்ராப்யவிரோதி நிரஸநஶீலரான எம்பெருமானார், ஸ்ரீபாஷ்யாதிகளான ஸ்ரீஸூக்திகளாலே பாஹ்ய குத்ருஷ்டி நிரஸநம்பண்ணி யருளின விஜயபரம்பரைகளைச் சொல்லி அத்தாலுண்டான வீரஸ்ரீக்கு மங்களாஶாஸநம் பண்ணுகிறார்

தாழிசை

சாறுவாகமதநீறுசெய்து சமணச்செடிக்கனல் கொளுத்தியே
சாக்கியக்கடலை வற்றுவித்து மிகு சாங்கியக்கிரிமுறித்திட
மாறுசெய்திடு கணாதவாதியர்கள் வாய்தகர்த்தறமிகுத்துமேல்
வந்தபாசுபதர் சிந்தியோடும்வகை வாதுசெய்த வெதிராசனார்
கூறுமாகுருமதத்தொடோங்கிய குமாரிலன்மதமவற்றின்மேல்
கொடியதர்க்கசரமிட்டபின் குறுகிமாயவாதியரைவென்றிட
மீறிவாதில்வரு பார்க்கரன்மத விலக்கடிக்கொடி யெறிந்துபோய்
மிக்கபாதவமதத்தை மாய்த்த பெருவீரர் நாளுமிக வாழியே.

சாருவாக மதநீறுசெய்து = "ப்ரத்யக்ஷமேகம் சார்வாக" என்கிற சார்வாகமதத்தை ஸ்வஸூக்திகளாகிற அக்நிஜ்வாலையாலே பஸ்மமாம்படி பண்ணி, சமணச்செடிக்கனல் கொளுத்தியே = சமணராகிற செடிக்கு அப்படியே அக்நிப்ரக்ஷேபத்தைப்பண்ணி, சாக்கியக்கடலை வற்றுவித்து = சாக்கியராகிற ஸமுத்ரத்தை ஸ்வஸூக்தி கிரணங்களாலே ஶோஷிப்பித்து, மிகு சாங்கியக்கிரிமுறித்திட = அதிகமாயிருப்பதான ஸாங்க்யமலையை வாக் வஜ்ரத்தாலே சேதித்து, மாறுசெய்திடு கணாதவாதியர்கள் = ப்ரதிகோடி

(௪) இரா-நூ.

களாய வாதமபணணுகிற காணுத வாதிகளுடைய, வாய=வாககை, தகாத து=தட வாககாலே பகநமாமபடி பணணி, அறமிகுதது மேலவநத = அதி கரிதது மேனமேலும வநத, பாசுபதாசிநதியோடுமவகை=பாஞஸாரயுததததிலே ருதரன தன பரிவாரததோடு ஓடினபபோலே, தன பககாக ளான சிவசமயததோாகளும சீறுபாறுகச சிதறி யோடுமபடி, வாதுசெயத வெதிராசனா = வாதமபணணி யருளின யதிராசா, கூறும=பிதறறுகிற பதாய, மா = பெருததிருபபதான, குருமததோடு = பரபாகரமததோ டு, ஒஙகிய = உயாநதிருபபதான, குமாரிலன மதமவறறினமேல= பா டடமதமெனகிற வவைறறினமேலே, கொடியதாககசரமவிடடபின = கூரமா யிருபபதான தாகக ஙரதமதை (பாணததை) பரயோகிதத பினபு, குறுகிமாய வாதியரைவெனறிட=மாயவாதிகளிருநத விடததிலே சென்று கிடடியவாகளை ஜயிததிடடு, மீறிவாதிலவரும=மிகுததுகாவிதது வாததத்திலே வருகிற, பாாககரன மதவிலககடிககொடியெறிநதுபோய=பா ஸகரன மதமெனகிற வோகொடிகள குருககிட அவறறைச சேதிததெறி நதுவிடடு அபபாலசென்று, மிகக யாதவமததததை மாயதத = அதிகமான யாதவபரகாசன மததததை மாணடுபோமபடி பணணின, பெருவீரா=மிக பராகரமததையுடைய எமபெருமானா, நாளுமிகவாழியே=நிதயாபிவிருத தமாமபடி மஙகளததை யுடையராகவேணும (உகூ)

(வ-ம) "ப்ரத்யக்ஷமேகம் சார்வாக:-பரதயகஷமேகம சாாவாக:"என கிற சாாவாகமததததை ஸவஸூகதிகளாகிற அககிஜவாலையாலே பஸமஸாததாமபடிபணணி, சமணராகிற செடிககு அபபடியே அக நிபரக்ஷேபததைபபணணி, ஙாககியராகிற ஸமுததிரததை ஸவஸூக திகிரணஙகளாலே ஙோஷிபபிதது, அதிகமாயிருபபதான ஸாஙக யகிரியை வாககவஜராதாலேசே (ஷ்) திததிடடு, பரதிகோடிகளாய வாதமபணணுகிற காணுதவாதிகளுடையவாககை ஸவவாககாலே (ஷ்ர) பகநமாமபடிபணணி,

மிகவுமுததததராய மேலவநதபாசுபதா, பாஞஸராபுததததி லே ருததிரன ஸபரிகரனுயோடினபபோலே, ததபாதாகளான வோகளும, சீறுபாறுகச்சிதறியோடும பிரகாரம வாதமபணணி யருளினவராய, ஏதேனு மொனறை ஜலபியாநிறபதாய, பெருத திருபபதான பராபாகாரமததோடே யுசசராயமா யிருபபதான பாடடமதமெனகிற வவறறினமேலே, கூரமாயிருபபதான தாகக ஙாதமதை பரயோகிததபினபு, எஙகும பரநதிருசசையாலே, மாயி

களிருந்த விடத்திலே சென்றுகிட்டி, (க)“வாதில்வென்றான் எம்மி ராமானுசன்” என்கிறபடியே அவர்களை ஜயித்திட்டு, மிகைக்கது வாதத்திலே வருகிற பாஸ்கரனுடைய மதமாகிற வமார்க்கத்தை, ஒருவரும் நடவாதபடி நிரோதித்து, கழியமிக்கிருக்கிற யாதவ மதத்தை மாண்டுபோம்படி பண்ணின வெம்பெருமானாருடைய இதர தர்ஶந நிரஸநத்தாலேவந்த மஹாவீரம், நாடோறுமபி(வ்)ருத்தமாய் வாழவேணும். குருமதம் = ப்ராபாகரமதம், குமாரிலன் மதம் = பாட்டமதம் “கொடியெறிந்துபோய்” என்று - அவ்வளவிலே நில்லாதே கைகழிந்திருக்கிற பாரிப்பையாகவுமாம். வந்தவாதிய ரென்றும் பாடம்சொல்லுவர் (௪௯)

(அ-கை) இனி இதர நிரஸநம்பண்ணியருளின ஸரமந்தீர, ஸ்ரீ பாஷ்யம் திருவாய்மொழி முதலான பகவத்விஷயங்களை வ்யாக்யாநித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கிற விருப்பு தமக்காகர்ஷகமா யிருக்கையாலே, பாதாதிகேஸாந்தமாக வநுபவித்து இவையெல்லாம் தனித்தனியே நித்யமாய்ச் செல்லவேணுமென்று மங்களாஸாஸநம்பண்ணியருளுகிறார்

எண்சீர்க்கழி நெடியாசிரிய விருத்தம்

சீராருமெதிராசர் திருவடிகள்வாழி
திருவரையிற்சாத்திய செந்துவராடைவாழி
ஏராருஞ்செய்யவடி வெப்பொழுதும்வாழி
இலங்கியமுந்நூல்வாழி யிணைத்தோள்கள்வாழி
சோராததுய்ய செய்யமுகச்சோதிவாழி
தூமுறுவல்வாழி துணைமலர்க்கண்கள்வாழி
ஈராறுதிருநாமமணிந்த வெழில்வாழி
இனித்திருப்போடெழில் ஞானமுத்திரை வாழியே (௫0)

சீர் = கல்யாண குணங்களாலே, ஆரும் = பரிபூர்ணமான, எதிராசர் = எம்பெருமானாருடைய, திருவடிகள் = பரமபோக்யமாய் நமக்கு ஸ்ரீரோ பூஷணமாயிருக்கிற திருவடித்தாமரைகள், வாழி = நித்யமங்களமாயிருக்க வேணும், திருவரையில் = கடிப்ரதேசத்தில், சாத்திய = தரித்த, செந்துவராடைவாழி = ஆதித்யனைப் பரிவேஷித்தாப்போலே மிக்கசிவப்பையுடைத்தான காஷாயவஸ்த்ரம் நித்யமங்களமாயிருக்கவேணும், ஏராரும் = அ

(க) இரா-நூ-௫௮

பூகால் நிறைந்த, செய்யவடிவு = சிவந்திருப்பதான திவ்யமங்கள விக்ரஹம், எப்பொழுதும் = ஸர்வகாலத்திலும், வாழி = நித்யமங்களமாயிருக்கவேணும் இலங்கிய முந்நூல்வாழி = வைதிகோத்தம மென்னுமத்தைத் திறம்பெறுத்துமதாய், ஸந்த்யாராக ரஞ்ஜிதமான மேகத்திலே மின்கொடி படர்ந்தாப்போலே திருமார்பிலே ப்ரகாஶிக்கிற ப்ரஹ்மஸூத்ரம் நித்யமங்களமாய்ச் செல்லவேணும், இணைத்தோள்கள் வாழி = பொறிக்கப்பட்ட திண் சாங்கைகளாய், அதற்குமேல் மோக்ஷப்ரதாந தீக்ஷிதங்களாய், ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கி நோவுபடுகிறவர்களை உத்தரிக்கிற ஶக்தியை யுடைத்தாய், இப்படிக்கொடுக்கவு மெடுக்கவு மாம்படியான குணத்தாலே பணைத்து நெடிதாயிருப்பனவாய், அதுக்குமேலே வகுளதுளஸீ நளிநாக்ஷ மாலாலங்க்ருதமாயிருக்கிற பாஹுயுகளங்களானவை நித்ய மங்களமாயிருக்கவேணும் சோர்ந்த-துய்ய செய்ய-முக்கச்சோதிவாழி = அநுபாவ்யமாய், பகவத்ஸாக்ஷாத்காரத்தாலும் ஆஶ்ரிதஸ்பர்ஶத்தில் ஹர்ஷத்தாலும் அநாஶ்ரித நிரஸநத்தில் அநாயாஸத்தாலும் அஸங்குசிதமாய், நிர்மலமாய், ஶோபாவஹமாயிருக்கிற, முகஜ்யோதிஸ்ஸானது நித்யமங்களமாய்ச் செல்லவேணும், தூமுறுவல்வாழி = ஆஶ்ரிதரக்ஷணத்தாலுண்டான வாநந்தத்தாலும் பகவதநுபவப்ரகர்ஷத்தாலுண்டானவாநந்தத்தாலும் பூவலர்ந்தாப்போலே ப்ரீதியைப்ரகாஶிப்பிக்கிற பரிஶுத்தமான சிறுநகையும் நித்யமங்களமாய்ச் செல்லவேணும், துணைமலர்க்கண்கள்வாழி = ஸ்ரீரங்கஸ்ரீயையும், தாம் திருத்தத் திருந்தின ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயையுமெப்போதும் கண்டுகளிக்குமதாய், காருண்யாம்ருத ப்ரஸாரண ஶீலமாய் ஆஶ்ரிதரை யம்மலங்களாக விழிக்குமென்னும்படி கடாக்ஷிக்கிற தவந்தவாரவிந்த ஸுந்தரமான திருக்கண்கள் அழகுமாறுமல் நித்யமங்களமாயிருக்கவேணும், ஈராறு திருநாமமணிந்த வெழில் வாழி = கீழ்ச்சொன்ன வெல்லாத்தையும் திறம்பெறுத்துவனவாய ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீக்கு வர்த்தகமாயிருப்பதாய், பொன்மலையின் பரிஸரமெங்கும் வெண்டாமரை பரப்புமாறப்பூத்தாப்போலே சிவந்த திருமேனியில் வெளியதான த்வாதஶோர்த்வபுண்ட்ரத்தா லுண்டான ஸௌந்தர்யம் நித்யமங்களமாய்ச் செல்லவேணும், இனிதிருப்போடு = பத்மாஸநஸ்தராயெழுந்தருளியிருக்கிற இருப்போடு, எழில் = உபயவேதார்த்த ப்ரகாஶகமாயிருக்கிற, ஞானமுத்திரை = பரதத்வபோத முத்திரையானது, வாழியே = நித்யமங்களமாயிருக்கவேணும் (௩௦)

(வ-ம்) ஆஶ்ரிதருக்கநுபாவ்யமான ஸ்வரூபரூபகுணங்களோடொவ்வியற வெல்லாத்தாலும் பரிபூர்ணராய், யதிகளுக்கு நாதரான வெம்பெருமானாருடைய (க) "அமரர் சென்னிப்பூ" என்னுமா

---

(க) திருக்குறு-௬

போலே (க)"இராமாநுச னடிப்பூ" என்று சொல்லப்படுமதாய், அத்
ஏவ பரமபோக்யமாய், நமக்குச் சிரோபூஷணமாயிருக்கிற திருவடிப்
போதுகள் போது செய்யாமல், ஏவம்விதாகாரத்தோடே நித்யமாய்ச்
செல்லவேணும் அதுக்குமேலே ஆறுபரகாரத்துக்காலேப் ப்ராப்தத்தாம
ஸ்வரூபத்துக்குத் தத்ஸாம்யமுண்டாகையாலே, (உ) "సీతా కాషాయవా
సినీ-ஸீதாகாஷாயவாஸிநீ" என்னும்படி பாரதந்த்ர்யாநந்யார்ஹ
த்வ ஸூசகமாய் திருவரைப்பூத்தாப்போலே திருவரைக்கலங்காரா
வஹமாய், ஆதித்யனைப் பரிவேஷித்தாப்போலே திருவரையிலே
சூழ்ச்சாற்றி மிக்கசிவப்பையுடைத்தான திருப்பரிவட்டமும் நித்
யமாய்ச் செல்லவேணும், அதுக்குமேலே ஆஸ்ரிதருக்கு ஸுபாஸ்ர
யமாய், ஸௌந்தர்யாதிகளாலேமிக்கு புஷ்பஹாஸஸுகுமாரமாய்,
(௩) "రూపమేవాస్యైతన్మహిమానమాచష్టే - ரூபமேவாஸ்யைதந்மஹி
மாநமாசஷ்டே" என்கிறபடியே, பரமாத்மராகம்புறம்பொசிந்தாப்
போலே சிவந்திருப்பதான திவ்யமங்களவிக்ரஹமும், ஸர்வகாலத்
திலும், "నిత్యం నిత్యాకృతిధరం-நித்யம் நித்யாக்ருதிதரம்" என்னும்
படி நித்யமங்களமாய்ச் செல்லவேணும்; அதுக்குமேலே வைதி
கோத்தமரென்னுமத்தை நிறம்பெறுத்துமதாய், ஸந்த்யாராக ரஞ்
ஜிதமானமேகத்திலே மின்கொடிபடர்ந்தாப்போலே திருமார்பிலே
ப்ரகாசிக்குமதாய் ப்ரஹ்மஸூத்ரவ்யாக்யாத்ருத்வத்யோதகமா யிரு
ப்பதான ப்ரஹ்மஸூத்ரமப்புநூலோடே நித்யமாயிருக்கவேணும்,

அதுக்கு அநந்தரம் †மிரண்டிடத்திலு மாவாய், (௪) "బాహు
చ్ఛాయామవష్టబ్ధో యస్యలోకో మహాత్మనః- பாஹுச்சாயாமவஷ்டப்தோ
யஸ்யலோகோ மஹாத்மந:" என்கிறபடியே ஸர்வர்க்கும் விஸ்ராந்தி
ஸாகியான பொற்கற்பகத்தினுடைய ஸாகைகளாய், அதஏவ மோக்ஷ
ப்ரதாநதீக்ஷிதங்களாய், விசேஷித்து நிமக்னோத்தரணசக்தியையுடை
த்தாய், இப்படி கொடுக்கவும் மீட்கவுமாம்படியான குணத்தாலே
புணைத்துமெடுத்தாயிருப்பனவைகளாய், (௫) 'தோளார் சுடர்த்திகிரி
சங்குடைச் சுந்தரன்' என்னும்படி, தோள்மேலொல்லாவிசக்ராம்பு
ஜங்களையுடைத்தாய், ஆதாஷகமான ஆழ்வார்களாலே அங்கிதமா
யிருப்பனவைகளாய், அதுக்குமேலே வத்துளதுளவநளிநாக்ஷமாலா

(க) இரா-நூ-௧௦௮
(உ)
(௩)
(௪) ரா-ஸு-௩-௯-௩௧
(௫) ஜ்ஞாநஸாரம்
† இரண்டிடத்திலுமுள்ளாய்

லங்கருதமாயிருக்கிற யுகளபாஹுக்களானவை, உக்தமான குணங்களோடே நித்யமாய்ச்செல்லவேணும், அதுக்குமேலே (௧) "ప్రహ్లాద ఇవ సౌమ్యస్తే ముఖం భా-ப்ரஹ்லாத இவ ஸௌம்யஸ்தே முகம்பாதி" என்றும், (௨) "முக்கசோதிமலர்ந்ததுவோ" என்றுஞ் சொல்லுகிறபடியே, அநுபாவ்யமாய், பகவத்ஸாக்ஷாத்காரத்தாலும் ஆச்ரிதர்பக்கத்தில் ஹர்ஷத்தாலும் அநாச்ரிதநிரஸநத்தி லநாயாஸத்தாலு மஸங்குசிதமாய், நிர்மலமாய், சோபாவஹமாயிருக்கிற முகஜ்யோதிஸ்ஸும் நித்யமாய்ச்செல்லவேணும்

அதுக்குமேலே (௩) 'సవిలాసస్మితాధారం బిభ్రాణం ముఖపఙ్కజమ్- ஸவிலாஸஸ்மிதாதாரம் பிப்ராணம் முகபங்கஜம்" என்னும்படி ஒரு முகமாய்ச்சேர்ந்து, அந்த முகபத்மத்திலுடைய விகாஸமென்னும்படியாய், (௪) "நின்பன்னிலா முத்தந்தவழ்கதிர்முறுவல்செய்து" என்கிறபடியே, ஆச்ரிதரக்ஷணத்தாலுண்டான வாநந்தத்தாலும், பகவதநுபவப்ரகர்ஷத்தா லுண்டான வாநந்தத்தாலும், பூவலர்ந்தாப்போலே ப்ரீதியை ப்ரகாசிப்பிக்கிற சாருஹாஸத்தாலுண்டான சந்த்ரிகையை ப்ரவஹிக்கிற ஸுஸ்மிதமு மப்படியே யென்றுமுள்ளதாயிருக்கவேணும் அதுக்குமேலே ஸ்ரீரங்கஸ்ரீயையும், தாமிருந்ததிருந்தின ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயையு மெப்போதும் கண்டு களிக்குமதாய், கருணைக்கு ப்ரஸ்ரவணசீலமாய், ஆச்ரிதரை யமலங்களாக விழிக்குமென்னும்படிக் கடாக்ஷிக்கிற, தவந்தவாரவிந்த ஸுந்தரமான திருக்கண்கள், செவ்விமாறாமல் நித்யமாய்ச் செல்லவேணும்,

கீழுக்தங்களான விவற்றை யெல்லாவற்றையும் நிறம்பெறுத்துமவையாய், ஸ்ரீவைஷ்ணவஸ்ரீக்கு வாசகமாயிருப்பதாய், பொன்மலையின் பரிஸரமெங்கும் வெண்டாமரை பரப்புமாறப்பூத்தாப்போலே, சிவந்த திருமேனியிலே வெள்ளியதாய் ஊர்த்வதாஸ்ரயண ஸுசிதஸக்தியை யுடைத்தான த்வாதசோர்த்வபுண்ட்ரதாரணத்தாலுண்டான ஸௌந்தர்யம் நித்யமாய்ச்செல்லவேணும் கீழுக்தமான வெல்லாத்துக்கு மதிஷ்டிகையாயிருந்த வந்தவதிஷ்டானஸக்தியாலே குத்ருஷ்டிகளாகிற குறும்பறும்படியாயு மாச்ரிதரக்ஷணத்துக்குறுப்பாயும், கேவல பகவதிச்சையாலே, (௫) "வைய

(௧) (௨) திருவாய்-௩-௧-௧ (௩) வி-பு-௫-௧௭-௨0.
(௪) திருவாய் ௯-௨-௫ (௫) திருவாய்-௪-௩-௧௧

மன்னி வீற்றிருந்து" என்னும்படி வ்யாவருத்தி தோற்ற, ஹம்ஸ ஸமூஹமத்யே ராஜஹம்ஸமானது ஸரஸமாக விஞ்சுமாபோலே, பரமஹம்ஸரானவர்களும், "ஸம்ஸேவிதஃ ஸம்யமிபிஃ" இத்யாதிப்படியே ராமாநுஜார்யவஶ்யராய இராமானுசனைத் தொழும் பெரியோராயிருக்கிற முதலிகளெல்லாரும் ஸேவித்திருக்க இவர்கள் நடுவே (௧) "పద్మాసనోపవిష్టం-పరతత్త్వబోధముద్ర-பத்மாஸநோபவிஷ்டம் பரதத்வபோதமுத்ரம்" என்னும்படி, பத்மாஸநஸ்தராய் எழுந்தருளியிருக்கிற விருப்போடே, உபயவேதாந்தார்த்தப்ரகாசகமாய உந்நிதரபத்மஸ்வபகமாயிருக்கிற ஜ்ஞாநமுத்திரையானது, காதாசித்கமன்றிக்கே ஸதாதநயோக்யமாம்படி வாழக்கடவதாகவேணும் (௨) "அன்னமதாயிருந்தங்கறநூலுரைத்த" என்னக்கடவதிறே †"தேரார்ந்துய்ய செய்ய முக்கச்சோதி" என்றும் பாடம் சொல்லுவர், "ஸ்ரீமத்தத்தங்க்ரியுகளம்" என்னுமாப்போலே, சீருமென்கிறதைத் திருவடிகளுக்கு விசேஷணமாக்கவுமாம் எதிராசருடைய திருவடிகளாகையாலே *வாயி-ல்வவ்ஞஜநாங்கிவத-பாதத்திவ்வயஞ்ஜநாங்கிதமாயிறே யிருப்பது (௩௦)

(அ-கை) அஸக்ருதாவருத்தி அபேக்ஷார்த்தாயமாகையாலே மீளவு மாதராதிசயத்தாலே, பாஹ்யகுத்ருஷ்டிநிரஸநம்பண்ணி யந்நினமைக்கும், மற்றும் லோகோபகாரகங்களாகச் செய்தருளின வைபெல்லாத்துக்கும், மங்களாசாஸனம்பண்ணியருளுகிறார் கீழ்ப்பாட்டுவிக்ரஹபரம் இப்பாட்டு ஸ்வரூபபரம்

அறுசமயச்செடியதனை யடியறுத்தான்வாழியே
அடைந்துவருங் குதிட்டிகளை யறத்துறந்தான் வாழியே
செறுகலியைச்சிறிதுமறத் தீர்த்துவிட்டான் வாழியே
தென்னரங்கர்செல்வமுற்றுந் திருத்திவைத்தான்வாழியே
மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்தான் வாழியே
மாறனுரைசெய்த தமிழ் மறைவளர்த்தோன் வாழியே
அறமிகுநற்பெரும்பூதூ ரவதரித்தான் வாழியே
அழகாருமெதிராச ரடியிணைகள் வாழியே (௩௧)

அறுசமயச்செடியதனை = பாஹ்யங்களான ஷண்மதங்களாகிற வருக்ஷங்களை, அடியறுத்தான் வாழியே = மூலச்சேதநம் பண்ணினவர் நித்ய

(௧) பராங்குசாஷ்டகம் (௨) தி. மொ-௧௧ ௫-௮ † தோரார்த.

மாக வாழ்ந்தருளவேணும், அடர்ந்துவரும் = கூட்டமாய்க்கூடி மேலிட்டு வருகிற, குதிட்டிகளை = "நான்மறையும் நிற்கக்குறும்புசெய் நீசருமாண்டனர்" என்கிறபடியே வேதத்தில் குறும்புசெய்கிற இவர்களை, அறத் துரந்தான் வாழியே = ஸவாஸநமாகத் துரத்தியருளினவர் நித்யமாக வாழ்ந்தருளவேணும், செறுகலியை = "அறுசமயம்போனது பொன்றி யிறந்தது வெங்கலி" என்கிறபடியே, இவைதனக்கெல்லாம் ஹேதுவாய் லோகமெங்கும் காடமாய் மூடிவருகிற கொடியகலியை, சிறிதும் = லேசமும், அற = இல்லாதபடி, தீர்த்துவிட்டான் வாழியே = போக்கடித்தவர் நித்யமங்களமாய் வாழ்ந்தருளவேணும், தென்னரங்கர் = ஸௌந்தர்ய பூர்ணரான பெரியபெருமாளுடைய, செல்வமுற்றும் = திருச்செல்வமெல்லாவற்றையும், திருத்திவைத்தான்வாழியே = கட்டளைப்படும்படி பண்ணியருளினவர் நித்யமங்களமாய் வாழ்ந்தருள வேணும், மறையதனில் = வேதத்தில் ப்ரதிபாதிக்கப் படுகிற, பொருளனைத்தும் = ஸகலார்த்தங்களையெல்லாம், வாய்மொழிந்தான்வாழியே = ஸ்ரீபாஷ்யரூபேண வருளிச்செய்தவர் நித்யமங்களமாய் வாழ்ந்தருளவேணும், மாறன் = நம்மாழ்வார், உரைசெய்த = அருளிச்செய்த, தமிழ்மறை = திராவிடவேதத்தை, வளர்த்தோன் வாழியே = வர்த்திப்பித்தருளினவர் நித்ய மங்களமாய் வாழ்ந்தருளவேணும் அறமிகு = அதில் தாத்பர்யமான ஸாரஜ்ஞகிராமம் ஜகத்திலே விருத்தியடைய, நற்பெரும்பூதூர் = விலக்ஷணமான ஸ்ரீபெரும்பூதூரிலே, அவதரித்தான் வாழியே = திருவவதரித்தவர் நித்யமங்களமாய் வாழ்ந்தருளவேணும், அழகாரும் = ஸௌந்தர்யாதிகளாலே பூர்ணராயிருக்கிற, எதிராசர் = எம்பெருமானாருடைய, அடியிணைகள் வாழியே = ஸர்வ ஶரண்யமான சரணயுகளங்கள் நித்ய மங்களமாய்ச் செல்லவேணும் (௩௧)

(வ-ம்) (௧) ' శాక్యోలూక్యాక్షపాదక్షపణకకపిలపతంజలిమతానుసారిణః- சாக்யோலூக்யாக்ஷபாதக்ஷபணக சபிலபதஞ்ஜலி மதாநுஸாரிண:" என்கிறபடியே, பாஹ்யஷண்மதங்களாகிற மூடிக்கிடக்கிற செடிக்களை மூலச்சேதம் பண்ணியருளினவர் நித்யமாக வாழ்ந்தருள வேணும் மேலிட்டுவரும் குத்ருஷ்டிகளை (௨) "நான் மறையும் நிற்கக்குறும்புசெய் நீசருமாண்டனர்" என்கிறபடியே, ஸவாஸநமாகத் துரத்தியருளினவர் நித்யமாக வாழ்ந்தருளவேணும் (௩) "அறுசமயம்போனது பொன்றியிறந்தது வெங்கலி" என்கிற படியே, இவைதனக்கெல்லாம் ஹேதுவாய், லோகமெங்கும் காட(ாத)மாய் மூடிவருகிற கலியை, அல்பாவஶேஷமுமில்லாதபடி மு

---

(௧) வேதார்த்தஸங்க்ர  (௨) இராநூ-௧௩  (௩) இரா-நூ-௪௧

டித்துவிட்டவர், வாழ்ந்தருளவேணும். அநந்தரம் "ஸ்ரீமந் ஸ்ரீரங்கஸ்ரியமநுபத்ரவா மநுதிநம் ஸம்வர்த்தய – ஸ்ரீமந் ஸ்ரீரங்கஸ்ரியமநுபத்ரவா மநுதிநம் ஸம்வர்த்தய" என்கிறபடியே, பெரியபெருமாளுடைய திருச்செல்வமெல்லாம் கட்டளைப்படும்படி பண்ணியருளினவர் வாழ்ந்தருளவேணும்.

அதுக்குமேலே ப்ரமாணத்தில் வந்தால் வேதத்தில் விப்ரதிபத்தி போக்கினவளவன்றிக்கே, வேதாந்தார்த்தமெல்லாம், ஸ்ரீபாஷ்யரூபேண அருளிச்செய்தவர் வாழ்ந்தருளவேணும். அதுக்குமேலே ஆழ்வாராலே அருளிச்செய்யப்பட்ட திருவாய்மொழியை, (க) "வளர்த்தவிதத்தாய்" என்னும்படி வர்த்திப்பித்தருளினவர் வாழ்ந்தருளவேணும். அதின் தாத்பர்யமான ஸாரஜ்ஞத்தரமம் ஜகத்திலே வர்த்திக்க விலக்ஷணமான ஸ்ரீபெரும்பூதூரிலே யவதரித்தருளினவர் வாழ்ந்தருளவேணும். ஸௌந்தர்யாதிகளாலே பூர்ணராயிருக்கிற எம்பெருமானாருடைய ஸர்வஸ்வமான சரணயுகளங்கள் நித்யமாகவாழவேணும். அழகாருமை—அடியிணைகளுக்கு விசேஷணமானபோது இரண்டு தாமரைப்பூவை நிறுத்து வைத்தாற்போலே யிருக்கிற சோதிப்பழமையும், ஸ்வதஃ உண்டான ஸௌந்தர்யத்தையும் சொல்லுகிறதாகவுமாம். அறம்மிகுநல் பெரும்பூதூர்' என்று பாடஞ்சொல்லுவர் அப்போது (உ) 'இராமானுசன் மிக்கபுண்ணியன்" என்கிற தர்மத்தை அதிகமாக உடைத்தென்னவுமாம். வாழியென்பது மங்களச்சொல். (௫௧)

(அ-கை) கீழ்ச்சொன்ன பெரும்பூதூர் அவதரித்தாரென்று ப்ரஸ்துதமான திருவவதார திருநக்ஷத்ரவைபவத்தை ப்ரீதியாலே பேசி அநுபவித்தருளுகிறார்.

சங்கரபாற்கரயாதவ பாட்டப்பிரபாகரர் தங்கள்மதம்
சாய்வுறவாதியர் மாய்குவரென்று சதுர்மறை வாழ்ந்திடுநாள்
வெங்கலி யிங்கினி வீறுநமக்கிலை யென்றுமிகத்தளர்நாள்
மேதினி நஞ்சுமை யாறுமெனத் துயர்விட்டு விளங்கியநாள்
மங்கையராளி பராங்குசமுன்னவர் வாழ்வு முளைத்திடுநாள்
மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள்

(க) திருவாய்மொழித்தனியன் (உ) இரா. நூ. ௯௬

செங்கயல்வாவிகள் சூழ்வயல் நாளும் சிறந்த பெரும்பூதூர்
சீமானிளையாழ்வார் வந்தருளியநாள் திருவாதிரைநாளே (௫௨)

சங்கர = சங்கரன் மதம், பாஸ்கர = பாஸ்கரன் மதம், யாதவ = யாதவ ப்ரகாசன் மதம் பாட்ட = பாட்ட மதம், ப்ரபாகரர் தங்கள் மதம் = ப்ரபாகரன் மதம், (இவையெல்லாம்) சாயவுற = நாசத்தை யடையா நிற்கையில், வாதியர் = வாதியர்களான சங்கராதிகளும், மாய்குவரென்று = ஜயமின்றி நசிப்பார்களென்று, சதுமறை = நாலு வேதங்களும், வாழ்ந்திடுநாள் = ஆத்த ப்ரௌஷ்கல்யத்தை யுடைத்தாய் அபிவ்ருத்தமாம் திவஸம், வெங்கலி = க்ரூரமான கலியும், இங்கினி வீறுமகிலையென்று = இவ்விடத்தி லினி நமக்கு ஸாம்ராஜ்யம் பண்ண ஸக்யமன்றென்று, மிகத் தளர்நாள் = மிகவும் நிலைகுலைந்திருக்கப்பண்ணுவதான திருநக்ஷத்ரம், மேதினி = பூமியும், நம் சுமை = நம் தலைச்சுமை, ஆறுமென்ன = கழியுமென்று, துயர்விட்டு = துக்கத்தைவிட்டு, விளங்கியநாள் = ப்ரகாசியாநிற்கிற திருநக்ஷத்ரம், (இனி பூமியிலுண்டான ஆசசாஸ்தலங்களை யாதரிக்குமவர்களாகையாலே) மங்கையராளி = திருமங்கையாழ்வாருடையவும், பராங்குச = நம்மாழ்வாருடையவும் முன்னவர் = மற்ற பூர்வாசார்யர்களுடையவும், வாழ்வு = ஸம்பத்து, முளைத்திடுநாள் = அங்குரிக்கும் திருநக்ஷத்ரம், மன்னிய = பெரியபெருமாள் நித்யவாஸம்பண்ணுகிற, தென்னரங்காபுரி = அழகிய அரங்கமாநகரமும், மாமலை = பெரிய திருமலையும், மற்றும் = மற்றுமுண்டான திவ்யதேசங்களும், உவந்திடுநாள் = ஆநந்திக்கும் திருநக்ஷத்ரம் செங்கயல் வாவிகள் = சிவந்தழகிய மத்ஸ்யங்களையுடைய தடாகங்களால், சூழ் = சூழப்பட்டிருக்கிற, வயல் = விளைவயல்களிலே, நாளும் = நித்யமாக உண்டான, சிறந்த = நகராலங்காரங்களை யுடைத்தாயிருக்கிற, பெரும்பூதூர் = ஸ்ரீபெரும்பூதூரை அவதார ஸ்தலமாகவுடைய, சீமானிளையாழ்வார் = ஸ்ரீமானாய இளையாழ்வாரென்று நிரூபகத்தை யுடையரான எம்பெருமானார், வந்தருளியநாள் = வந்தவதரித்தருளின திநம், திருவாதிரைநாளே = திருவாதிரைத் திருநக்ஷத்ரம், (இதுவுமொருநாளே! "ஸ்ரீமாநாவிரபூத் பூமௌ ராமாநுஜ திவாகர" என்னக்கடவதிறே) (௫௨)

(வ-ம) விசேஷணத்தை இல்லைசெய்வாரும், விசேஷ்யத்தை இல்லைசெய்பவருமாய் இப்படி வி([illegible])பாகத்வயத்ருஷ்டிகளாய்க் கொண்டு வேகார்த்தாபலாபம் பண்ணுகிறவர்களாகையாலே, வைதிகத்தாமம் தலைசாயும்படி வந்து கிட்டியிருக்கிறவாதியர்களான சங்கராதிகளுடைய மதம் நாசத்தை யடையுமென்று நாலுவகைப்பட்ட வேதமானது ஆத்தப்ரௌஷ்கல்யத்தை யுடைத்தாய் அபி(வி)ருத்தமாம் திவஸம்

(௬) "கலியும் கெடுங்கண்டு கொள்மின்" என்று சொல்லுகிறபடியே, க்ரூரமான கலியானது இவ்விடத்தில் இனி நமக்கு ஸாமர்த்யமில்லை யென்று மிகவும் நிலைகுலைந்து நிற்கப்பண்ணுகின்ற திருநக்ஷத்ரம் கலியும், கலிகார்யமான குத்ருஷ்டிகளும் போகையாலே, "விச்வம்பரா புண்யவதீ ப்ரபவம்பரா புண்யவதீ" என்றும், (௨) "தவந்தாரணிபெற்றது" என்று சொல்லுகிறபடியே, பூமியானது, நம் தலைச்சுமை கழியுமென்று துக்கத்தை விட்டு ப்ரகாசியாநிற்கிற திருநக்ஷத்ரம், இனி பூமியிலுண்டான வாசஸ்தலங்களை யாதரிக்குமவர்களாகையாலே, திருமங்கைக்கு நிர்வாஹகரான திருமங்கையாழ்வார், பராங்குசர் (ஸ்ரீ) தேயரான நம்மாழ்வார் முதலானவர்களுடைய ஸம்ருத்தி அங்குரிக்கும் திருநக்ஷத்ரம்

அதுக்குமேலே, பெருமாள் நித்யவாஸம் பண்ணுகிறகோயில், (௩) "அருவிசெய்யாநிற்கும் மாமலை" என்று சொல்லப்படுவதான பெரிய திருமலை, மற்றுமுண்டான திவ்யதேசங்களும், ஸ்வஸ்வ ஸம்ருத்தியையடைவுதோமென்று, ஹர்ஷிக்கும் திருநக்ஷத்ரம் இதுக்கெல்லாமடியாய், (௪) "அங்கயல்பாய்வயல்" என்னுமாபோலே, செவ்வந்தழுவிய கயல்களையுடைத்தான வாவிகளாலே சூழப்பட்டிருக்கிற விளைவயல்களினாலே நித்யமாகவுண்டான நகராலங்காரங்களை யுடைத்தாயிருக்கிற, ஸ்ரீபெரும்பூதூரை அவதாரஸ்தலமாகவுடைய ஸ்ரீமானுப, இளையாழ்வாரென்று நிரூபகத்தையுடையரானவெம்பெருமானார் அவதரித்தருளின திவஸம் திருவாதிரைதிருநக்ஷத்ரம்

இதுவொருநாளே! "ஸ்ரீமாந் ஆவிரபூத் பூமௌ ராமாநுஜதிவாகர:-ஸ்ரீமாநாவிர்பூத்பூமௌ ராமாநுஜதிவாகர:' என்னக்கடவதிறே - "தென்னரங்காபுரிமாமலைமற்றும் முவந்திடுநாள்" என்கிறதுக்கு, கதஸ்தரான ஜீவேச்வரர்கள் ஹர்ஷிப்பார்களென்றபடி, மன்றல் =பொருந்தலும், நிலைப்பாடும் ஆறுதல் = சமித்தல் (௫) "உன நாமமெல்லாம் என்றன் நாவினுள்ளே யல்லும்பகலும் மருமபடிநல்க" என்கிறபடியே, இவருக்கு தத்வாசகமான திருநாமங்களதானதுபாவ்யங்களாயிருக்கையாலே, எதிராசனென்றும், இராமானுச

(௧) திவாய் ௫ ௨ ௧ (௨) இரா நூ சடு (௩) திருவி-
(௪) இரா-நூ-௪ப (௫) இரா-நூ-தனியன்

னென்றும், எம்பெருமானாரென்றும், இளையாழ்வாரென்று மநுஸந்தித்தருளினார் (௫௨)

(அ-கை) கீழ் ப்ராஸங்கிகமாய் வந்த மங்களாஶாஸநத்திலே மண்டியநுபவித்து, "ప్రాసఙ్గికం పరిసమాప్య ప్రకృతమనుసరతి-ப்ராஸங்கிகம் பரிஸமாப்ய ப்ரக்ருதமநுஸரதி" என்கிறபடியே, மீளவும் ப்ரக்ருதத்திலே இறங்கி, ஸர்வலோகத்திலேயுண்டான ஸர்வதுரிதங்களும் போம்படியவதரித்து ரக்ஷித்தருளினாப்போலே, அடியேனுடைய வஜ்ஞாநத்தைப்போக்கி யடிமைகொண்டஸ்வாமியானவரே! அடியேனுடைய ப்ரக்ருதிஸம்பந்தநிபந்தநமாயுண்டான தேஹஸ்திதி தத்விமோசந காலாதிநியமங்களையெல்லாமறிந்தருளும் ஸர்வஜ்ஞரானதேவர், அஜ்ஞனானவடியேனை விலக்ஷணமானதேசத்தி லாரோஹிப்பித்தருளத் திருவுள்ளமாகில், விளம்பித்திருக்கிறதுக்கு ஹேதுவேதென்று அவர் தம்மையே கேட்கிறார் (௫௨)

இன்னமெத்தனைகாலமிந்த வுடம்புடனியானிருப்பன்
இன்னபொழுதுடம்பு விடுமின்னபடியதுதான்
இன்னவிடத்தே யதுவுமென்னு மிவையெல்லாம்
எதிராசா நீயறிதி யானிவையொன்றறியேன்
என்னையினியிவ்வுடம்பை விடுவித்துன்னருளால்
ஏராருமவைகுந்தத்தேற்ற நினைவுண்டேல்
பின்னைவிரையாமல் மறந்திருக்கிறதென்பேசாய்
பேதைமைதீர்த்தென்னையடிமைகொண்டபெருமானே (௫௫)

இன்னம் = இன்னமும், எத்தனைகாலம் = எவ்வளவுகாலம், இவ்வுடம்புடன் = ஹேயமான இந்த தேஹத்தோடே, யானிருப்பன் = இதில் பொருத்தமற்றிருக்கிற வடியேனிருப்பேன், இன்னபொழுதுடம்புவிடும் = இன்னகாலத்திலே தேஹம்விடும், இன்னபடி = இன்ன ப்ரகாரத்திலே, அதுதான் = அந்த தேஹவியோகந்தான், இன்னவிடத்தே = இன்னஸ்தலத்திலே, அதுவும் = அந்த தேஹவிமோசநமாம், என்னுமிவையெல்லாம் = என்று சொல்லப்படுகிற விவையெல்லாம், எதிராசா = எம்பெருமானாரே! நீயறிதி = ஸர்வஜ்ஞரான தேவர் அறிந்தருளுவீர், யான் = அஜ்ஞனானவடியேன், இவையொன்றறியேன் = இவற்றில் லேசதேசமுமறியேன், (ஆனபின்பு) பேதைமைதீர்த்து = அஜ்ஞானத்தைப்போக்கி, என்னை = அடியேனை, அடிமைகொண்டபெருமானே = ஆட்கொண்டஸ்வாமீ! என்னை =

இத்தேஹத்தோடே பொருத்தமற்றிருக்கிற வடியேனை, இனி - உன்னருளால்=இனி தேவர்கிருபையாலே, இவ்வுடம்பை விடுவித்து= இச்சரீரத்தை விடுவித்து, ஏராரும்=திவ்யாலங்கார பரிபூர்ணமான, வைகுந்தத்தேற=பரமபதத்திலேயேற்ற, நினைவுண்டேல் = திருவுள்ளமுண்டாகில், பின்னை=அநந்தரம், விரையாமல்=த்வரியாமல்,மறந்திருக்கிறதென்=நிருத்யோகராய் விஸ்மரித்தெழுந்தருளி யிருக்கிறதற்கு ஹேதுவேது? பேசாய்=அத்தை யருளிச்செய்தருளீர் (௧௧)

(வ-ம) தவத்ஸம்பந்தஜ்ஞாநஸூந்யதையாகிற மௌர்க்க்யத்தைப்போக்கி, சேஷபூதனானவடியேனை, (௧) "வினையேனையுனக்கடிமையறக்கொண்டாய்" என்கிறபடியே, சேஷத்வாநுகுணமாக தாஸ்யத்தைக்கொண்டருளின ஸ்வாமியானவரே! இன்னமெத்தனைகாலாவதி இந்தஹேயமானதேஹத்தோடே, இதில் பொருத்தமற்றிருக்கிற நானிருப்பன, "இன்னகாலத்திலே தேஹம் முக்தமாம், இன்னப்ரகாரத்தாலே இந்த தேஹவிமோசநம், இந்த ஸ்தலத்திலே" என்று சொல்லப்படுகிற விவையெல்லாம், எதிகளுக்கு நாதராய், ஸர்வஜ்ஞானதேவர் அறிந்தருளுவீர். அஜ்ஞனான நானிவற்றிலேகதேசமு மறியேன்

ஆனபின்பு, இத்தேஹத்தோடே பொருத்தமற்றிருக்கிறவென்னை, இனிதேவர் க்ருபையாலே இச்சரீரத்தை விடுவித்து, திவ்யாலங்காரபரிபூர்ணமான பரமபதத்திலே ஏற்றத் திருவுள்ளமுண்டாகில், அநந்தரம், (௨)"விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான்" என்கிறபடியே த்வரியாமல் நிருத்யோகராய், விஸ்மரித்தெழுந்தருளியிருக்கிறதற்கு ஹேதுவேது? அத்தை யருளிச்செய்தருளீர் தேவர்க்கு க்ருபையுண்டாயிருக்க விளம்பஹேதுவான ஸாதநமித்தலையி லில்லையாயிருக்க, காலவிளம்பம் கார்யமென்னென்று கருத்து, "அமர்ந்திருக்கிற தென்பேசாய்" என்றுபாடஞ்சொல்லுவார் நினைவுண்டேலென்று, விதத்வத்தைக்கிறதாகவுமாம் (௩௩)

(அ-கை) நமக்கு க்ருபையுண்டானாலும், எத்தனை த்யாவான்களையும், நிர்க்கருணராம்படி பண்ணுமதான உம்முடைய ப்ரபல ப்ரதிபந்தகங்கள் கிடந்ததேயென்று எம்பெருமானார்க்கு நினைவாக, (௩)"ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி ஸாவபாபேபயோமோக்ஷயிஷயாமி"

(௧) திருவாய் ௭ ௬-௧ (௨) திருவாய்-௧0 ௩ ௩ (௩) கீ-௧௮-௬௬

என்கிற ஸர்வேஶ்வரன், தேவர்க்கு விதேயனன்றோ? ஆகையாலே, க்ருதக்நனான நான் பாபபலங்களைப் புஜியாமல், முக்தனாம்படி பண்ணவேணுமென்கிறார்.

முன்னைவினை பின்னைவினை ஆரத்தமென்னும்
  மூன்றுவகையான வினைத்தொகையைத் துமியானே
என்னையடைந்தோர் தமக்குக் கழிப்பனென்னும் அரங்கர்
  எதிராசா நீயிட்ட வழக்கன்றோ சொல்லாய்
உன்னையல்லதறியாத யானிந்த வுடம்போ
  டுழன்று வினைப்பயன் புசிக்கவேண்டுவதொன்றுண்டோ
என்னுடைய விருவினையை யிறைப்பொழுதில் மாற்றி
  ஏராரும் வைகுந்தத்தேற்றி விடாய் நீயே (௫௪)

முன்னைவினை = பூர்வாகம், பின்னைவினை = உத்தராகம், ஆரத்தம் = ப்ராரப்தம், என்னும் = என்று சொல்லப்படுகிற, மூன்றுவகையான = மூன்று ப்ரகாரங்களான, வினைத்தொகை = பாபஸமூஹங்கள், அனைத்தும் = அகிலத்தையும், யானே = ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வ விசிஷ்டனான நானே, என்னை = வாத்ஸல்யாதி குணவிசிஷ்டனான வென்னை, அடைந்தோர் தமக்கு = அநந்யசரணராய் சரணவரணம் பண்ணின ப்ரபந்நரானவர்கள் தங்களுக்கு, கழிப்பனென்னும் = அப்படிப்பட்ட வகிலபாபத்தையும் ஸவாஸநமாகப் போக்குவனென்றருளிச்செய்த, அரங்கர் = திருவரங்கரான பெரியபெருமாள், எதிராசா = யதிகளுக்கு நாதரானவரே! நீயிட்டவழக்கன்றோ = தேவருக்கு விதேயரன்றோ? சொல்லாய் = அருளிச்செய்ய வேணும், (இவ்வர்த்தம் யதார்த்தமென்னுமது தேவரருளிச்செய்யலாகாதோ?) உன்னையல்லது = (இப்படி ஈஶ்வரவஶீகாரத்தையுடைய) தேவரையொழிய, அறியாத = வேறொரு ரக்ஷகனையுமறியாத, யான் = அடியேன், இந்தவுடம்போடு = இச்சரீரத்தோடு, உழன்று = பொருந்தி அதுவேயாத்ரையாக விருந்து, வினைப்பயன் = தத்கார்யமான பாபபலங்களை, புசிக்கவேண்டுவதொன்றுண்டோ? அநுபவிக்கவேணுமென்றொரு நிர்ப்பந்தமுண்டோ? என்னுடைய = அடியேனுடைய, இருவினையை = ப்ரபலபாபத்தை, இறைப்பொழுதில் = க்ஷணகாலத்திலே, மாற்றி = ஸவாஸநமாகப் போக்கி, ஏராரும் = அழகுநிறைந்துள்ள, வைகுந்தத்தேற்றிவிடாய் = வைகுந்தமாநகரத்திலேற்றி விட்டருளீர், நீயே = தேவரீரே யென்கிறார்) (௫௪)

(வ-ம) "పూర్వాఘముత్తరాఘఞ్చ సమారబ్ధమఘంతథా - பூர்வாசமுத்தராகஞ்ச ஸமாரப்தமகந்ததா" என்கிறபடியே, பூர்வாகமுத்தராகமாரப்தமென்று சொல்லப்படுகிற, வாகத்ரயமான பாபஸமூஹங்க

ளான வெல்லாவற்றையும், (க) "మామేకం శరణం వ్రజ, అహం త్వా సర్వ పాపేభ్యో మోక్షయిష్యామి-மாமேகம் சரணம்வ்ரஜ, அஹம்த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று, ஸஹாயாந்தர நிரபேக்ஷனுய்க்கொண்டு ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வ விசிஷ்டனுனநானே, வாத்ஸல்யாதி குணவிஶிஷ்டனுனவென்னை அநந்யஶரணராய் ஶரணவரணம்பண்ணின ப்ரபந்நரானவர்கள் தங்களுக்கு அப்படிப்பட்ட வகிலபாபத்தையும் ஸவாஸநமாகப்போக்குவனென்ற ருளிச்செய்த செம்மையுடைய திருவரங்கரான பெரியபெருமாள், எதிகளுக்கு நாதரானவரே! (உ) 'వశ్యస్సదా భవతి తే-வஶ்யஸ்ஸதாபவதிதே" என்கிறபடியே தவத்தீ(దధీ)நரன்றோ? இவர் தத்தம் யதார்த்தமென்னுமதுதேவர் தாமருளிச்செய்யலாகாதோ? இப்படி ஶஶ்வர வஶீகாரத்தையுடைய தேவரையொழிய, வேறொரு ரக்ஷகாந்தரமறியாதே அநந்யகதியாயிருக்கிறநான் இந்தத்தேஹத்தோடேபொருந்தி அதுவே யாத்ரையாகவிருந்து, தத்கார்யமான பாபபலங்களை புஜிக்கவேணுமென்றொருநிர்ப்பந்தமுண்டோ? பாபங்களுக்குமெனக்குமென்ன ஸோத்திபுண்டு? இப்படியானபின்பு என்னுலே அநுபாவ்யமாயிருக்கிற பாபல்காமங்களை, (ங) "கடிவார்தீயவினைகள் நொடியாருமளவைக்கண்" என்கிறபடியே க்ஷணகாலத்திலேஸவாஸநமாகப் போக்கி நான் தரைக்கிடைகிடவாமல் ஏர்கொள்வைகுந்தமாநகரத்திலே தவத்தேகபரமாயற்றபின்பு ஏற்றிவிட்டருளீர் ஏர் = அழகு ஆர்தல் = மிகுதி (௩௪)

(அ-கை) அடியேனுடைய ஸகலப்ரதிபந்தகங்களைப்போக்கி, ரக்ஷித்தருளுகையிலே யத்நம்பண்ணியருளுகிறதேவர், கருணையாலே நித்யகைங்கர்யங்கொண்டருள ஸங்கல்பித்திருக்க, அதை யு † மதிக்ரித்துப்போவதான வென்னுடைய ருசிவிரோதியாயிருக்கிற விந்த்ரியபாரவஶ்யத்துக் கடியானபாபங்களைப்போக்கி, தவதேகமநாவாம்படி பண்ணியருளவேணுமென்கிறார்

அருளாலேயடியேனை யபிமானித்தருளி
அநவரதமடிமைகொள்ள நினைத்து நீயிருக்க
மருளாலேபுலன்போக வானசெய்புமென்றன்
வல்வினையை மாற்றியுன்பால் மனம்வைக்கப்பண்ணுய்

(க) கீ-௧அ-௬௬ (உ) யதிராஜவிம்ஶதி (ங) திருவாய் க-சு க0
† அதிக்ரமிச்சு

தெருளாரும் கூரத்தாழ்வானும் அவர் செல்வத்
திருமகனார் தாமும் அருளிச்செய்த தீமைத்
திரளான அத்தனையுஞ் சேரவுள்ள என்னைத்
திருத்தி உய்யக்கொள்ளும் வகை தேருமெதிராசா (௫௫)

அருளாலே = கிருபையாலே அடியேனையபிமானித்தருளி = அடியேனை அங்குற்றைக்கு அநந்யார்ஹனாம்படி அபிமானித்தருளி, அநவரதம் = நிரந்தரம், அடிமைகொள்ள = நித்யகைங்கர்யம் கொண்டருள, நினைத்து நீயிருக்க, = தேவர் திருவுள்ளம் பற்றியிருக்க, மருளாலே = அதனையறியவொட்டாத அஜ்ஞானத்தாலே, புலன் = இந்த்ரியங்களினுடைய, போக = விஷயபோகங்களை வாஞ்சை செய்யும் = அபேக்ஷிக்கின்ற, என்றன் = அடியேனுடைய, வல் = ப்ரபலமான, வினையை = கர்மங்களை, மாற்றி = அதிலின்றும் முகம் மாற்றப்பண்ணி, உன்பால் = தேவர் விஷயத்தில், மனம்வைக்க = மநஸ்ஸு வைக்கும்படி, பண்ணும் = பண்ணியருளவேணும், தெருளாரும் = ஜ்ஞானபரிபூர்ணரான, கூரத்தாழ்வானும் = ஸ்ரீகூரேசரும், அவர் செல்வத்திருமகனார்தாமும் = அவர் திருவயிற்றிலே அவதரிக்கும்படியான ஸ்ரீயையுடையரான பெரியபட்டரும், அருளிச்செய்த = தந்தம் க்ரந்தங்களிலே அருளிச்செய்த, தீமைத்திரளான = பாபஸமூஹங்களான, அத்தனையும் = எல்லாவற்றையும், சேரவுள்ள = சேரவுண்டான, என்னை = அடியேனை, திருத்தி = செயல் நன்றாகத்திருத்தி, உய்யக்கொள்ளும் = உஜ்ஜீவிக்கப்பண்ணியருளும், வகை = ப்ரகாரத்தை, எதிராசா = எம்பெருமானாரே! தேரும் = சிந்தித்தருளும் (௫௫)

(வ்யா) (௧) "కూరనాథభట్టాఖ్య దేశికవరోక్త సమస్తనైచ్యమ్, అద్యాస్త్యసంకుచితమేవ-கூரநாதபட்டாக்ய தேசிகவரோக்த ஸமஸ்தநைச்யம் | அத்யாப்யஸங்குசிதமேவ" என்கிறபடியே, ஜ்ஞானபரிபூர்ணரான கூரத்தாழ்வானும், அவர் திருவயிற்றிலே அவதரிக்கும்படியான ஸ்ரீயையுடையராய், அதடியாக, (௨) "శ్రీరంగరాజకమలాపదలాలితత్వమ్-ஸ்ரீரங்கராஜகமலாபதலாளிதத்வம்" என்னும்படி, ஸ்ரீமத்குமாரரான பெரியபட்டர் தாமும் ஸ்வஸ்வக்ரந்தங்களை (௩) "బుద్ధ్వాచనోచ-புத்வாசநோச" (௪) "అతిక్రామన్నాజ్ఞామ్-அதிக்ராமந்நாஜ்ஞாம்" இத்யாதிகளாலே அருளிச்செய்த பாபஸமூஹங்களானவை யொன்றொழியாமல் எல்லாஞ்சேரவுண்டான என்னை (௫) "செயல் நன்றாகத்திருத்திப் பணிகொள்வான்" என்னும்படி, திருத்தி உஜ்ஜீவிக்கப்பண்ணி

(௧) யதிராஜவிம்ஶதி (௨) ர-ஸ்த-௩-௧௭ (௩) வர-ஸ்த-௭௧
(௪) ர-ஸ்த (௫) கண்ணி-௧௦

க்கொண்டருளும் ப்ரகாரம் சிந்திக்கருளுமவரே! தேவருடைய கேவலக்ருபையாலே, அடியேனை அங்குறைகைக்கு யோக்யனாக்குமபடி யபிமானித்தருளி நிரந்தரம் நித்யகைங்கர்யங்கொண்டருள தேவர் திருவுள்ளம்பற்றியிருக்க, அதையறியவொட்டாத வஜ்ஞானத்தாலே, (௧) “[illegible]-ஶப்தாதிபோகருசிரந்வஹமேததே ஹா” என்கிறபடியே, இந்த்ரியபரிச்சின்னங்களான விஷயபோகங்களிலே வாஞ்சையைப்பண்ணும் என்னுடைய வநிவார்யமான பாபலகாமங்களை, அதில் நின்றும் முகமாறப்பண்ணி, (௨) “தன்பால் மனம்வைக்கத்திருத்தி” என்கிறபடியே, ப்ராப்தஶேஷியான தேவர்விஷயத்திலே மநஸ்ஸைவைக்கும்படி பண்ணியருளவேணும் யதார்வயமாக யோஜிக்கவுமாம் (௩௫)

(அ-கை) “மருளாலே புலன்போகவாஞ்சைசெய்யு மென்றன் வல்வினையைமாற்றி” என்றபின்பு மனவந்தேயாட்க காணவகப்பாலே, அதபர்த்தஹேதுபமாயிருக்கிற விஷயாநுபவஸங்கவாஞ்சையானது அடியேனுடைய மநஸ்ஸை, பலாத்காரத்தோடே தான் மேலிடா நின்றது. அதுக்குஹேது வாஸநாகாமங்க ளின்னதென்றறியே னென்கிறார்

நேரிசை வெண்பா

‡வாசனையி லூற்றமோ மாளாதவல்வினையோ
ஏதென்றறியே னெதிராசா—நீதாகும்
ஐம்புலனிலாசை யடியேன் மனந்தன்னை
வன்புடனே தானடருமவந்து (௩௬)

எதிராசா = எம்பெருமானாரே! நீதாகும் = இவ்வாத்மாவுக்கு அத்யந்தம் பொல்லாங்காயிருக்கிற, ஐம்புலனில் — பஞ்சேந்த்ரிய பரிச்சிந்நமான விஷயஸங்கங்களில், ஆசை = அபேக்ஷையானது, அடியேன் = அடியேனுடைய, மனந்தன்னை = மநஸ்ஸை, வன்புடனே = பலாத்காரத்தோடே, தானவந்து = தானே மேலிட்டுவந்து, அடரும் = மேலிடாநின்றது விஷயங்களில் மூட்டுவதாகத் தான் மேலிடாநின்றது, (இந்த ருசிக்கு ஹேது) வாசனையில் = அநாதிபாபவாஸனையிலே பற்றியிருக்கிற, ஊற்றமோ = த்ராட்யமோ, மாளாத = ப்ராயஶ்சித்த விநாஶ்யமாத அநுபவவிநாஶ்யமாதலன்றிக்கே யிருப்பதான, வல்வினையோ = அடியேனுடைய பாபலகாம

(௧) யதிராஜவிம்ஶதி. (௨) தி-வாய-௧ ௫ ௧௦. ‡ வாதனை.

இன்றளவுமில்லாத வதிகாரமேலுமெனக்
கென்றுளதாம் சொல்லா யெதிராசா — குன்றா
வினைத்தொடரை வெட்டிவிட்டு மேலைவைகுந்தத்
தென்னைக்கடுக வேற்றாததென்? (௩௭)

இன்றளவும்=இப்போதளவும், இல்லாவதிகாரம் = இல்லாத அதிகாரம், மேலும்= இனிமேல், எனக்கு = அடியேனுக்கு, என்றுளதாம்= எப்போ துண்டாகும்? (இப்போ துண்டாகாததோ இனிமேலுண்டாகப் போகிறது) சொல்லாய்=இத்தை தேவர் அருளிச்செய்யவேணும், எதிராசா=எம்பெருமானாரே, குன்றா=ஒன்றும் நசியாமலிருப்பதான, வினைத் தொடரை = பாபாநுபந்தத்தை, வெட்டிவிட்டு= சேதித்துப் போகட்டு, மேலை=ஸர்வோத்தரமான, வைகுந்தத்து=பரமபதத்தில், என்னை = அடியேனை, கடுக = சீக்கிரமாக, ஏற்றாதது = ஆரோபியாததற்கு, என் = என்ன காரணம்? (௩௭)

(வ-ம்) "இன்று திருநாடுமெனக்கருள வெண்ணுகின்றாய்" என்னும்படியான இன்றளவுமில்லாதவதிகாரம் இனிமேலென்றுண்டாவதாம். இப்போதுண்டாகாததோ இனிமேலுண்டாகிறது? இத்தை தேவரருளிச்செய்யவேணும் இப்படிருசிவிரோதியாய், ஒன்றும் நசியாமலிருப்பதான (௧) "தொன்மாவல்வினைத்தொடர்" என்னும்படியான பாபாநுபந்தத்தைச் சேதித்துப்போகட்டு (௨) "மேலைவைகுந்தத்திருத்தும்" என்கிறபடியே ஸர்வோத்தரமான தேசத்திலே, அதிலபேக்ஷையையுடையவடியேனை, அஜ்ஞாநாவஹமான ஸம்ஸாரத்தில் நின்றும் ஶீக்ரமாக ஆரோபியாததற்கு ஹேதுவேது? என்னாலே எல்லாம் அஶக்யமாய், தேவராலே எல்லாம் ஶக்யமாயிருந்தபின்பு தாழ்க்கைக்கொரு ஹேதுவந்தராயில்லையென்றுகருத்து (௩௭)

(அ-கை) இன்றளவு மில்லாதவதிகார மென்றதை, †தாரக கிஶப்தரியாயத்தாலே தாம் ஶிப்பியாநின்றுகொண்டு, தத்தேதுபூர்வமாக வத்தையருளிச்செய்கிறார்

அஞ்சிலறியாதா ரைம்பதிலும் தாமறியார்
என்சொல்லெனக்கோ வெதிராசா — நெஞ்சம்

(௧) திருவாய்-௩-௨-௨ (௨) திருவாய்-௮-௯-௧௧ † வெளிக

உன் தாளொழிந்தவற்றையே யுகக்கின்றும்
அந்தாபமற்றிருக்கையால் (௩௮)

எதிராசா = எம்பெருமானாரே, நெஞ்சம் = க்ஷுத்ரவிஷயங்களிலே மண்டியிருக்கிற மனஸ்ஸானது உன் = ப்ராப்யசேஷியான தேவருடைய, தாள் = நிரதிசயபோக்யமான திருவடிகளுக்கு, ஒழிந்தவற்றையே = பாஹ்யமாய் அப்ராப்தவிஷயங்களானவற்றையே, உகக்க = ஆதரிக்க, இன்றும் = இப்போதும், அந்தாபம் = இப்படி அப்ராப்தமான விஷயங்களை விரும்புவதே! என்கிற பஸ்சாத்தாபமும், அற்று = இல்லாமல் இருக்கையால் = இருப்பதினாலே, அருளில் — விவேகாங்குரயோக்யமான பஞ்சவர்ஷத்தில், அறியாதவர் = அறியாதவர்கள், ஐம்பதிலும் = ஐம்பதாவயஸ்ஸிலும், தாமறியார் = அவர்களறியார்கள், என்சொல் = என்று சொல்லுகிற இந்த லௌகிகவார்த்தை, எனக்கோ = அடியேன் பொருட்டோ? (௩௮)

(வ-ம்) எதிகளுக்கு நாதரானவரே! (க) "தீமனம்" என்னும்படி க்ஷுத்ரவிஷயங்களிலே மண்டியிருக்கிற மனஸ்ஸானது, (உ) "யாதானும் பற்றி நீங்கும்" என்கிறபடியே, ப்ராப்யசேஷியான தேவருடைய நிரதிசயபோக்யமான திருவடிகளை யொழிந்த வப்ராப்தவிஷயங்களானவற்றையே யாதரிக்க, இப்படி யப்ராப்தமான விஷயத்தை விரும்புவதே யென்று தபிக்கவேண்டும்படியான தன்மை ப்ராப்தமாயிருக்கிறவின்றும் அநுதாபஸம்பந்தமாயிருக்கையாலே, (௩) "[illegible]-தலமாத பாலயே விவேகதமா" என்கிறபடியே, விவேகாங்குரயோக்யமான பஞ்சவர்ஷத்தி லஜ்ஞரானவர்கள் தத்பரிணமத்தசையான வைம்பதுவயஸ்ஸிலும் விவேகஶூன்யதையாலே அஜ்ஞராவர்களென்று சொல்லுகிற இந்த லௌகிகஶப்தம் எனக்கே அம்ஶமாயிற்றே? ஆகையால் ஸர்வஶக்தி ஸஜ்ஞனை யெனக்கு ஸர்வஜ்ஞரான தேவரொருபோக்கடி கண்டருளவேணுமென்று கருத்து "நெஞ்சமும் தாளொழிந்தவற்றையே யுகக்கும்" என்று பாடமானபோது "அருளிலறியாதார் ஐம்பதிலும் தாமறியாரென்ற சொல்லெனக்கோ வெதிராசா வின்றும் மந்தாபமற்றிருக்கையால், நெஞ்சமுந்தா ளொழிந்தவற்றையே யுகக்கும்" என்று மிப்படியோஜிக்கக்கடவது. (௩௮)

(அ-கை) நீர் "உன் தாளொழிந்தவற்றையே யுகக்கும்" என்று அவர்க்கயம ப்ராப்தங்களாயிருக்குமவற்றையே பற்றினால்,

---

(க) திருவாய்-௫-௭-௮. (உ) திருவி-௩௫. (௩) வி-பு-௧-௧௭-௭௫

விரஸமாயிருக்கிற வும்மை அவரப்படி யங்கீகரிக்கப் புகுகிறு ரென்று பாரம்யஸ்தாகக் கபிராயமாக, ஆஸ்ரயணத்தைச யிலே குண ஹீநனாய், அதனாலே விரஸனாயிருக்கிற வென்னுடைய தோஷத்தை போக்யமாக விரும்பி யங்கீகரித்தருளின வெம்பெருமானார் என்னை யுபேக்ஷித்தருளாரென்னுமக்கை ஸந்தாப்யமாக வருளிச் செய்கிறார்

வேம்புகறியாக விரும்பினார் கைத்ததென்று
தாம்புகடாதே புசிக்கு தன்மைபோல—தீம்பனிவ
னென்றுநினைத்தென்னை யிகழார் எதிராசர்
அன்றறிந் தங்கீகரிக்கையால் (நுக)

வேம்பு=வேம்பிலேயும், கறியாக=கறியமுதாக, விரும்பினார் தாம்= அபேக்ஷித்த தாங்கள், கைத்ததென்று = கைப்பாகவிருக்கிறதென்று, புக டாதே = உபேக்ஷியாதே, புசிக்கும் = புஜிக்கிற, தன்மைபோல = ஸ்வபாவம்போலே, தீம்பனிவனென்று = இவன் துஷ்டனென்று, நினைத்து=விசாரித்து, என்னை = அடியேனை, எதிராசர் = எம்பெருமானார், அன்று=அக்காலத்தில் - அங்கீகாரஸமயத்தில், அறிந்து= தோஷ யுக்தனென்றறிந்து, அங்கீகரிக்கையால்=அந்த தோஷத்தையே போக்ய மாகக்கொண்டு அங்கீகரித்தருளுகையாலே, இகழார்=உபேக்ஷித்தருளார்

(வ-ம) அதாவது (க) "வேம்புங்கறியாகுமேன்று" என்கிற படியே, ஸாரஸமானவற்றை யுபேக்ஷித்து, அதயந்தம் கைப்பையுடைத்தாய், விரஸமாயிருப்பதானவேம்பிலே துடக்கமாயுள்ள தத்ஸம்பந்திபதார்த்தங்களைச் சோற்றுக்கு உபதம்சமாகவாதரித்து புஜிக்குமவர்கள், அது விரஸமாய்க்கைத்ததென்று அதைவிரும்பிப் புஜிக்கும் தாங்கள் உபேக்ஷியாதே புஜிக்கும் ஸ்வபாவம்போலே அங்கீகாரஸமயத்திலே தோஷயுக்தனென்றறிந்து, அதை போக்யமாகக் கொண்டங்கீகரித்தருளுகையாலே, எம்பெருமானார் இப்போதிவன் தோஷயுக்தனென்று உபேக்ஷித்தருளார் (உ) "ஸங்க்ஷேஸ-நத்யஜேயம்" என்னும்படி யிதோராங்கீகாரத்தாட்டிய பிருந்தபடியென்னென்று கருத்து (நுக)

(அ-கை) உம்முடையதோஷம் பாராதே யங்கீகரித்தோமாகில மேலுள்ளதும் நாமே கரமத்திலே செய்கிறோமென்று, எம்பெருமா

(க) திருவ-கக (உ) ரா-யு-கஅ நூ

னருக்கு நீளவாக த்வதநுபவயோக்யமான காலத்தை யெல்லாம் வ்யர்த்தமே போக்கி, அதுக்கு எல்லையான ஸம்ஸாரத்திலிராமல் அநுபவத்துக்குப் பாங்கான தேசத்திலே சேர்ந்து, அதுக்கிடைச்சுவர் தள்ளிப்போக்க வேணுமென்கிறார்

அவத்தே பொழுதை யடியேன் கழித்துப்
பவத்தே யிருக்குமது பண்போ — திவத்தே யான்
சேருமவகை யருளாய் சீரார் எதிராசா
போருமினி யிவ்வுடம்பைப் போக்கு (௪௰)

அடியேன் = தாஸபூதனான நான், பொழுதை = தேவருடைய வநுபவ கைங்கர்யங்களுக்கடைத்த விலக்ஷணமான காலமெல்லாம், அவத்தே = வ்யர்த்தமாக, கழித்து = போக்கி, இப்பவத்தே = விரோதியாயிருக்கிற இந்த ஸம்ஸாரத்தில், இருக்குமது = பொருந்தியிருக்கிறது, பண்போ = தேவருடைய க்ருபாஸ்வபாவத்துக்குச் சேருமோ? திவத்தே = பரமபதத்தை, யான் = அடியேன், சேருமவகை = அடையும் ப்ரகாரத்தை, அருளாய் = க்ருபை செய்தருளீர், சீர் = ஸமஸ்த கல்யாணகுணங்களாலே, ஆர் = பூர்ணரான, எதிராசா = எம்பெருமானாரே! போரும் = ஸம்ஸாரத்தில் சிறையிருப்பு போரும்-போரும், இனி இவ்வுடம்பை = இனி இந்தச் சரீரத்தை, போக்கு = போக்கியருளவேணும் (௪௰)

(வ-ம) தேவருடைய வநுபவகைங்கர்யங்களுக்குக் கடைத்த விலக்ஷணமான காலமெல்லாம் அதுக்கிட்டுப்பிறந்த அடியேனப்படிப் பட்டவந்தப்பொழுதைப் பழுதேபோக்கி, விரோதியாயிருக்கிற ஸம்ஸாரத்தில் பொருந்தியிருக்கிறது தேவர் க்ருபாஸ்வபாவத்துக்குப் போருமோ? ஆகையால் கைங்கர்யவார்த்த(ர்)கமாய், (க) "பரந்தாமமென்னுந்திவம்" என்னும்படியான தேசத்திலேயபேக்ஷையுடைய நான் கெடுமரக்கலங்கரைசேர்ந்தாப்போலே சேரும்ப்ரகாரமிரங்கியருள வேணும் — ஸமஸ்தகல்யாணகுணபரிபூர்ணராய எதிகளுக்கு நாதரானவரே! ஸம்ஸாரத்தில் சிறையிருப்புபோரும் இனி பகவத் ஸ்வரூபதிரோதானகரியாய், விபரீதஜ்ஞாநஜநநியாய் ஆத்மாவோடே பொருந்தியிருக்கிற விந்ததேஹத்தைப் போக்கியருளவேணும், இதுவே புருஷார்த்தம், பண்பு = ஸ்வபாவம், "அடியேன் இப்பவத்தே இருக்குமது பண்போ" என்று கீழோடே கூட்டவுமாம் (௪௰)

---

(க) இரா-நூ

(அ-கை) ஆனாலும் முன்புடைய தோஷபூயஸ்த்வத்தைப்பாராதே அருந்தேவைகளைச்செய்யும்படி சொல்லக்கடவத்தனோ வென்னில்; அஸக்ருதபராதனை வடியேனுடைய ப்ரசுருத்ஸம்பந்த நிபந்தமாய் வருமபராதங்களையெல்லாம் பொறுத்து ரக்ஷிக்கு மவரானபின்பு, ஸகலஜீவலோகஸமுஜ்ஜீவநார்த்தமாக வவதரித்தருளின தேவர், அதிசபலனானவெனக்கு தயைபண்ணி ரக்ஷிக்கவேணுமென்கிறார்.

என்னைப்போல் பிழைசெய்வா ரிவ்வுலகிலுண்டோ
உன்னைப்போல் பொறுக்கவல்லாருண்டோ — அனைத்துலகும்
வாழப்பிறந்த வெதிராச மாமுனிவா
ஏழைக்கிரங்காயினி. (௫௩)

என்னைப்போல் = அடியேனைப்போல், பிழை = அபராதத்தை, செய்வார் = செய்யுமவர்கள், இவ்வுலகிலுண்டோ = இந்த லோகமெல்லாம் தேடிப்பார்த்தாலும் கிடைப்பரோ? உன்னைப்போல் = தேவரைப்போலே, பொறுக்கவல்லார் = ஸஹிக்கவல்லார், உண்டோ = உபயவிபூதியிலுண்டோ? அனைத்துலகும் = ஸமஸ்தலோகங்களும், வாழ = உஜ்ஜீவித்து வாழும்படியாக, பிறந்த = அவதரித்தருளின, எதிராச = யதிராச ரென்கிற திருநாமத்தையுடைய, மா = பூஜ்யரான, முனிவா = யோகிஜநாக்ரகண்யரே! ஏழைக்கு = சபலனாயிருக்கிற வடியேனுக்கு, இனி இரங்காய் = இனி தயை பண்ணியருளவேணும். (௫௩)

(வ்-ம்) (க) ‘‘நிகரின்றி நின்றவென்னீசதைக்கு’’ என்கிறபடியே அபராதம்பண்ணுமவர்களில் வைத்துக் கொண்டு, மாத்ருஶாபராதக்ருத்துக்களாயிருக்குமவர்கள் இந்தலோகமெல்லாந் தேடிப்பார்த்தாலுங்கிட்டுமோ? (க) ‘‘அருளுக்குமஃதேபுகல்’’ என்கிறபடியே அபராத ஸஹரில்வைத்துக்கொண்டு, தேவரைப்போலே ஸஹிக்கவல்லாருபயவிபூதியிலுண்டோ? ஸகலஜீவலோகமு முஜ்ஜீவித்து வாழும்படியாக வவதரித்தருளி, அவர்கள் ரக்ஷணத்திலே மநநம் பண்ணியருளுகிற வெம்பெருமானாரே! இப்படிக்கைகழிந்தபின்பு, பற்றினத்தைவிடாத சபலனாயிருக்கிற வெனக்கு தயைபண்ணியருளவேணும். (உ) ‘‘[illegible]-ததஹம் த்வத்ருதே ந நாதவாந்’’ இத்யாதிவத். (௫௩)

---

(க) இரா-நா-௬௯. (உ) ஸ்தோ-ர-௫௰.

(வ்-ம) (க) 'கோவாயைவரென்மெய்குடியேறி' இத்யாதிப்படியே, பஞ்சேந்த்ரியங்களுமாக்ரமித்து ஸங்கிங்கராநும்படி ஸ்வஸ்வவிஷயங்களைக்காட்டி, காட்டென்று துடாத்து பாதிக்குந்தசையிலே கேவலக்கே ஸேஷபூதனானவடியேன் கஜேந்த்ராழ்வான மடுவின் கரையிலே, (உ) " க்ராஹ க்ரஸ்தே கஜேந்த்ரே-ராகும் ஸ்ரீகாகுத்தே ஜலே " என்று (ங) *முழுவலிமுதலை நீர்க்குள்ளே யிழுத்துக்கொண்டுபோய் நலியும்போது, (ச) "மநஸா சிந்தயந் ஹரிம்-மநஸா சிந்தயத்தரிம்" என்று சிந்தித்து (ரு) "நாராயணாவோ" என்றோலமிட்டாப்போலே, ஸகலாபந்நிவாரணமான தேவர் திருவடிகளை ஸ்மரித்து, ராமாநுஜாவென்று கூப்பிட்டேன்,

அநந்தரம் அப்படி பாதகங்களானவவை, அடியேனை மேலிடாமல், தடைபண்ணியருளவேணும் எதிகளுக்கு நாதரானவரே! தேவரையொழிய வெனக்கு ரக்ஷகரார்? இனி வேறுண்டோ? வேறு ரக்ஷகாந்தரமில்லையாகையாலே, தேவரே ரக்ஷித்தருளவேணுமென்று கருத்து "உன்பதங்கள் தன்னை நினைந்தோலமிட்டால்" என்கிறதுக்கு எம்பெருமானார் திருவடிகளை சரணமென்று மநஸ்ஸாலே ஸ்மரித்து, வாக்காலே பெருமிடறுசெய்து கூப்பிட்டாரென்னவுமாம் (சஉ)

(அ-கை) 'இரங்கா யெதிராசா' என்று அவரை வெறுக்கிறதென்? ப்ராப்யபூமியில் ப்ராவண்யமும், த்யாஜ்யபூமியில் ஜிஹாஸையுமதிகாரிக்கு வஸ்யாபேக்ஷையாயிருந்தது அவையிரண்டுமில்லாத நமக்கு அஸஹ்யமானதேசத்தை அவரெப்படித்தந்தருளுவரென்று அதில் நின்றும் நிராஸராகிறார்

இந்தவுலகிற்பொருந்தாமை யேதுமில்லை
அந்தவுலகிற்போக வாசையில்லை—இந்நமக்
கெப்படியேதான் தருவ ரெந்தையெதிராசர்
ஒப்பில் திருநாமிக்கத்து. (சங)

இந்தவுலகில்=கொடுவுலகமான விந்த த்யாஜ்யபூமியில், பொருந்தாமை=அடிக்கொதிப்பது- அருசி, ஏதுமில்லை=அத்யல்பமுமில்லை, அந்தவு

(க) தி-மொ-எ-எ-க  (உ) வி-தாம-சக-சக  (ங) தி-மொ-ரு-அ-ங
(ச) வி-தாம-சக-சஎ.  (ரு) சிறிய திருமடல்.

லகில் = அந்த ப்ராப்யபூமியான பரமபதத்தில், போக = செல்ல, ஆசை யில்லை = ப்ராவண்யமுமில்லை, இந்த நமக்கு = இப்படி யபேக்ஷிதங்களா யிருக்கிற விரண்டிலும் அந்வயமற்றிருக்கிற நமக்கு, எந்தை = தந்தையா கிய, எதிராசர் = எம்பெருமானார், ஒப்பு = உபமானம், இல் = இல்லாத, (வைபவத்தையுடைய) திருநாடு=பரமபதத்தை, எப்படியேதான் = எந்த ப்ரகாரமாகத்தான், உகந்து = ஸந்தோஷித்து, தருவர் = உபகரித்தரு ளுவர்? (௪௩)

(வ-ம) (௧) "கொடுவுலகம்காட்டேல்" என்னும்படியான இந்த த்யாஜ்யபூமியில் அடிக்கொதிப்பு அத்தபலமுமில்லை (௨) 'வானு லகம்தெளிந்தே யென்றெய்துவது" என்னும்படியான அந்த ப்ராப்ய பூமியை ப்ராபிக்கவேணுமென்கிற ப்ராவண்யமுமில்லை இப்படி யபேக்ஷிதங்களாயிருக்கிற விரண்டிலும் அந்வயமற்றிருக்கிற நமக்கு ஜநகரான எம்பெருமானார் அஸத்ருஶ வைபவத்தை யுடைத்தான (௩) "தெளிவிசும்பு திருநாடு" என்கிற திருநாட்டை உகப்புடனே எப்படித்தானுபகரித்தருளுவர் (௪௩)

(அவதாரிகை) "இந்த வுலகில் பொருந்தாமை யேதுமில்லை யந்தவு லகில் போகவாசையில்லை" என்று அலந்திருக்கிறவர், நம்மளவிதுவாயி ருந்து இனி லௌகிகராவென்னென்றவர்களிடத்திலே கண் வைக்க அவர்கள்படி சாலத்தண்ணிதாயிருந்ததாறே இப்படியிருப பத்து இவர்கள் பாபங்களைச் செய்யும்பிரகார மென்றதுக்கு நொந் தருளிச்செய்கிறார்

மாகாந்தநாரணனார் வைகுமவகையறிந்தோர்க்
கேகாந்தமில்லை யிருளில்லை—மோகாந்தர்
இவ்விடமேகாந்த மிருளென்று பயமற்றிருந்து
செய்வர்கட்டாம் பாவத்திறம் (௪௪)

மாகாந்த = லக்ஷ்மீகாந்தனான, நாரணனார்=ஸர்வேச்வரன், வைகு மவகை = (நாராயணத்வ ப்ரயுக்த ஸம்பந்தமடியாக ஸமஸ்தசேதநாசேத நங்களிலும் உள்ளும் புறம்பும்) வ்யாபித்திருக்கிற, ப்ரகாரத்தை, அறிந் தோர்க்கு=அறிந்த ஜ்ஞாதாக்களுக்கு,ஏகாந்தமில்லை,யிருளில்லை=தனிமை யில்லை, அந்தகாரமில்லை, ச்ருதி "நாராயண பரோஜ்யோதி" என்றும், "பரஞ்சுடரை=நாரணனைக்கண்டேன்" என்றும், "அவனே யென்னு

(௧) திருவாய்மொழி ௪-௧-௭ (௨) தி-மொ-௧௦-௮ (௩) தி-வாய-௯-எ-௫

மயனான ஸர்வேஶ்வரன் எங்கும் வ்யாபித்திருக்கும்படியைத் நெஞ்சென்னும் உட்கண்ணாலே காணமாட்டாதே, இவ்விடம் ஒருவருமில்லாத ஏகாந்தம், இவ்விடம் தேஜஃப்ரசாரமில்லாத இருளென்று நிர்ப்பயராயிருந்து (க) "तस्यान्तिके त्वं वृजिनं करोषि -தஸ்யாந்திகேத்வம் வ்ருஜிநம் கரோஷி'' என்கிறபடியே பாபஸமூஹங்களை அஜ்ஞானத்தாங்கள் செய்யாநிற்பார்கள், இவர்கள்படி இதுவாவதே யென்று கருத்து. வைகல்=சொல்லலும், இருத்தலும், திறம்=ஸமூஹம் இப்பாட்டுக்கடி, எம்பெருமானாருடைய உக்த்யநுஷ்டானங்களாயிருக்கும் (௪௪)

(அ-கை) கீழ் "மாகாந்தநாரணனார் வைகும் வகை" என்று வ்யாப்தியை ப்ரஸ்தாவித்து, இப்படி ஸர்வவ்யாபகனான அவனோடே அநாதியாய் வருகிற ஸம்பந்தமுண்டாயிருக்க, அத்தை அறியாதே கீழ்ச்சொன்ன மோஹாந்தரிலே யந்யதமராயிருந்த நான், ஆசார்ய ஸம்பந்தத்தாலேயன்றோ உஜ்ஜீவித்ததென்று ஸ்வலாபத்தை எப்போதும் அநுஸந்தித்துப்போருவென்று, தம் திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்கிறார்

நாராயணன் திருமால் நாரம் நாமென்னுமுறை
யாராயில் நெஞ்சே யநாதியன்றோ — சீராரும்
ஆசாரியனாலேயன்றோ நாமுய்ந்ததென்று
கூசாமலெப்பொழுதுங் கூறு (௪௫)

நாராயணன் திருமால் = "திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்" என்கிறபடியே ஸ்ரிய:பதியானவன் நாரஶப்தவாச்யங்களான வஸ்துக்களையுடையவன் நாரம் நாம் = நித்யமான அநதாரங்கள் நாம், என்னும் = என்கிற, உறவு = அந்த அநாத்யயந ஸம்பந்தம், ஆராயில் = நிரூபிக்கில், நெஞ்சே = மனஸ்ஸே! அநாதியன்றோ = இன்றாக வுண்டானதன்றே? அநாதியாய் வருகிறதன்றோ? சீராரும் = அந்தஸம்பந்தத்தை யுணர்த்தின ஜ்ஞாநாதிகுண பரிபூர்ணரான, ஆசாரியனாலேயன்றோ = ஆசார்யராலே யல்லவோ? நாமுய்ந்ததென்று = நாமுஜ்ஜீவித்ததென்று, கூசாமல் = லஜ்ஜாபிமானங்களைவிட்டு, எப்பொழுதும் = ஸர்வகாலமும், கூறு = ப்ரவர்த்திதமாக அநுஸந்தித்துக்கொண்டிரு. (௪௫)

---

(க) பார-ஸம்ப-௭௪ ௧௯.

(வ்ம்) (க)"திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்" என்கிறபடியே, அவன் ஸ்ரியஃபதி நாராயணன். நாம் நாரமென்கிற இந்த வநாத்பயநஸம்பந்தம் நிரூபிக்கில், மநஸ்ஸே இன்றாகவுண்டான தன்றே! அநாதியாய் வருகிறதன்றோ? ஆயிருக்கவது நெடுங்காலம் ஸம்பந்தஜ்ஞாநமன்றிக்கே, அஸித்ப்ராயமா யிழந்தன்றோ கிடந்தது. இப்போது தத்ஸம்பந்தத்தை யுணர்த்தின ஜ்ஞாநாதிகுணபரிபூர்ணாயிருக்கிற வாசார்யனாலே யன்றோ நாமுஜ்ஜீவித்ததென்று, (க) "பெருமையும் நாணும் தவிர்ந்து பிதற்றுமின்" என்கிறபடியே, லஜ்ஜாபிமாநங்களைவிட்டு ஸர்வகாலமும் ப்ரவீத்தமாக வநுஸந்தித்துக்கொண்டு போரு. (உ) "இறையு முயிரும்" இத்யாதி. "ஜ்ஞேசேசர் - ஆத்மநோஹ்யதிசீஸ்ய" இத்யாதி. (௪௫)

(அ-கை) கீழ் ஆசார்யனாலே யன்றோ நாமுய்ந்த தென்கிறவிதத்தை விசேஷிஷ்டமாக்கி யருளிச்செய்கிறார்.

திருவாய்மொழிப்பிள்ளை தீவினையோந்தம்மைக்
குருவாகி வந்துய்யக்கொண்டு—பொருவில்
மதிதானளித்தருளும் வாழ்வன்றோ நெஞ்சே
எதிராசர்க் காளானோமியாம். (௪௬)

திருவாய்மொழிப்பிள்ளை="தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்கிறபடியே பூர்வரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் போக்யமாக வவதரித்த திருவாய்மொழியிலே யவகாஹித்து, அதில் ஸப்த ரஸம், அர்த்தரஸம், பாவரஸமென்கிற விவற்றை யநுபவித்து, ததேகநிஷ்டராய, தத்வ்யதிரிக்த ஸாஸ்த்ரங்களை த்ருணவத் ப்ரதிபத்திபண்ணியிருக்கையாலே, திருவாய்மொழியோட்டை ஸம்பந்தத்தையே தமக்குநிரூபகமாக வுடையராய், ஆழ்வார் திருவடிகளிலே ஸர்வவித கைங்கர்யமே யநவரதம் செய்துகொண்டு போராநிற்கிற திருவாய்மொழிப்பிள்ளை, தீவினையோந்தம்மை=க்ரூரகர்மாக்களோமா யிருக்கிறநம்மை, குருவாகி=ஆசார்யராயவதரித்து, வந்து = நாமிருந்தவிடம் தேடிவந்து, உய்யக்கொண்டு= உஜ்ஜீவிக்கும்படி யங்கீகரித்து. பொருவில்=ஸாஸ்த்ரஜ்ஞாநாதிகள் போலன்றிக்கே - உபமாந ரஹிதமான, மதி = திருமந்த்ரத்தால் பிறக்கும் தான ஜ்ஞாநத்தை, தான் = தாம், அளித்தருளும் = உபகரித்தருளும், வாழ்வன்றோ=ஸம்பத்திறலன்றோ? நெஞ்சே=மநஸ்ஸே! யாம் = நாம், எதிராசர்க்கு=எம்பெருமானார்க்கு, ஆளானோம்= அடிமையாயினோம்.(௪௬)

(க) திருப்பல்லா-௧௧. (உ) ஜ்ஞாநஸாரம்.

ராத், மானுசர்கள் = மனிதருடைய, இருப்பிடந்தன்னில் = வஸிக்கிற ஸ்தலந்தன்னில், இப்பொழுதும் = க்ஷணகாலமும் இரா = வர்த்தியா திருக்கிற, (ஆழ்வான் போல்வாரான) மானுசரவர்க்கு = மநுஷ்யருக்கு, எல்லாவடிமையும் = ஸர்வவித கைங்கர்யங்களையும், செய்யவெண்ணி = செய்யக்கருதி, இரா = அத்தைச் செய்யாமலிருக்கிற, மானுசர் தம்மை = அறிவற்ற மநுஷ்யர்தங்களை, மானுசராக = பசு ஸமானரானவர்களை மநுஷ்யராக, என்கொல் எண்ணுவது = எப்படித்தான் எண்ணுவது? (“ஜ்ஞாநேந ஹீநா: பசுபிஸ்ஸமா:” என்னுமத்தனை. (௪௭)

(வ-ம்) (௧) “நாளிருள்ளவும் பகலும் நானழைப்பன் நாராயணா வென்னும் நாமம்” என்கிறபடியே, “ராமாநுஜாயநம” என்று திவாராத்ரவிபாக [illegible] மற வநுஸந்திக்கப் ப்ராப்தமாயிருக்க, அத்தைச் செய்யாதேயிருக்கிற பசு ஸமாநர் மநுஷ்யர்கள் வர்த்திக்கிற ஸ்தலந்தன்னில் க்ஷணகாலமும் நிஸ்ஸஹமாய் வர்த்தியாதிருக்கிற வாழ்வான் போல்வாராய், ஸாஸ்த்ரவஸ்யரான மநுஷ்யஜந்மாக்களுக்கு (௨) “எந்தத் தொழும்பும் சொல்லால் மனத்தால் கருமத்தினால் செய்வன்” என்கிறபடியே ஸர்வவித கைங்கர்யங்களையுஞ் செய்யவெண்ணியிருக்கப் ப்ராப்தமாயிருக்க, அத்தைச் செய்யாதேயிருக்கிற க்ருதக்நமநுஷ்யர் தங்களை, (௩) “மானிடவரல்லரென்றென் மனத்தே வைத்தேன்” என்கிறபடியே, பசுஸமானவர்களை மநுஷ்யராக வெப்படி யெண்ணுவது, (௪) “ஜ்ஞாநேந ஹீந: பசுபிஸ்ஸமாந:-ஜ்ஞாநேந ஹீநா: பசுபிஸ்ஸமாநா:” என்னுமத்தனை

(அ-கை) கீழ் எல்லாவடிமையுஞ் செய்யவெண்ணி, இராமாநுசாய என்கிற ப்ரஸங்கத்திலே தம்முடைய வாகாதிகரணங்களை இப்படியே யவர்கள் விஷயத்திலே அநந்யார்ஹமாம்படி பெரியபெருமாள் பண்ணியருளினபடியைப் ப்ரீதியாலே பேசியருளுகிறார்

எண்ணாதேனென்னெஞ்ச மிசையாதேனா னிறைஞ்சாது சென்னி
கண்ணுனவை யொன்றுங்காணேனுரு கலியாரங்கிய
வொண்ணுதவனை முகங்களித்தோனெதிராசனடி
கண்ணுதவரை யரங்கேசர் செய்தநலம் நமக்கே (௪௮)

---

(௧) தி-மொ-௧-௧-௫ (௨) இரா-நூ-௪௦
(௩) தி-மொ-௧௧-௭-௬ (௪)

பக்கலைப் பண்ணமாட்டாது, (இறைஞ்சாது சென்னி) (௧) "ப்ரணாமி மூர்த்நா-ப்ரணமாமி மூர்த்நா" என்னுமவருடைய சென்னியிறே (கண்ணிணையொன்றுங்காணாது) (௨) "கண்கருதிடுங் காண்" (௩) 'ஸ்ரீமாதவாங்க்ரி-ஸ்ரீமாதவாங்க்ரி' என்னும்படியான திருவடிகளைக்கேசமும் தர்சிக்க ஆசைப்படாது, (௪) "காணலுறுகின்றேன்" என்கிறவிடத்துக்கு, காணவாசைப்படுகின்றேனென்றிறே அருளிச்செய்தது கவியாரென்கிறது (௫) "ஏவினார் கவியார்" என்றபடியே பாகத்தவத்தினுறைப்பைப் பற்றவாய்த்து (௪௰)

(அ-கை) "எதிராசனடி நண்ணுதவரை நண்ணுது" இத்யாதியாலே, தமக்கு ஸம்ஸாரிகளிடத்திலுண்டான வைமுக்யத்தைத் தர்சிப்பித்து, மீள அவர்களனர்த்தத்தைக்கண்டு ஆற்றமாட்டாதே, அவர்களுக்கு மோக்ஷோபாயமாக எம்பெருமானாருடைய வாச்ரயணாதிகளை விதிக்கிறார்.

நந்தா நரகத்தழுந்தாமை வேண்டில் நானிலத்தீர்
என்தாதையான எதிராசனை நண்ணுமென்றுமவன்
அந்தாதிதன்னை யநுசந்தியுமவன் தொண்டருடன்
சிந்தாகுலங்கெடச் சேர்ந்திரும் முத்திபின் சித்திக்குமே (௪௧)

நந்தா = ஒருகாலு மநுபவித்து முடியாத, நரகத்து = ஸம்ஸாரமாகிற நரகத்திலே, அழுந்தாமை = மக்நராகாமை, வேண்டில் = அபேக்ஷித்தீர்களாகில், நானிலத்தீர் = நாலுவகைப்பட்ட பூமியிலுண்டானவர்களே! என் = அடியேனுக்கு, தாதையான = பிதாவான, எதிராசனை = எம்பெருமானாரை, நண்ணும் = ஆச்ரயியுங்கோள், என்றும் = ஸர்வகாலத்திலும், அவன் அந்தாதிதன்னை = மோக்ஷஹேதுவாயிருக்கிறவருடைய திருநாமத்தைப் பாட்டுக்கள்தோறும் ப்ரதிபாதிப்பதாய் அதற்குமேல் ப்ரபந்நகாயத்ரியாயிருக்கிற வைலக்ஷண்யமான நூற்றந்தாதிதன்னை, அநுசந்தியும் = அநுஸந்தியுங்கோள், அவன் தொண்டருடன் = அவர் திருவடிகளிலே சபலராய்த் தொண்டுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுடன், சிந்தாகுலம் = இதர ஸஹவாஸத்தாலுண்டான மனோதுக்கமெல்லாம், கெட = நசிக்கும்படி, சேர்ந்திரும் = ஒருநீராகப் பொருந்தியிருங்கோள், பின் = அனந்தரம், முத்தி = மோக்ஷமானது, சித்திக்கும் = ஸம்சயமற ஸித்திக்கும் (௪௧)

(௧) யதிராஜவிம்சதி (௨) இரா-நூ- (௩) யதிராஜவிம்சதி-௧
(௪) ௬ திருவ-௩௪ (௫) தி-மொ-௧-௬-௮

பரமேவ்யோமந்" என்று சொல்லுகிற ப்ருஹி பாவித்திலையை யுடைத்தாயி ருப்பதான அந்தப் பரமபதத்திலே, உம்மை = நித்யஸம்ஸாரிகளான உங்களை, வைக்கும் = நித்யரோடே யொருகோவை யாக்கிவைப்பர், நீர் = நீங்கள், எதிராசவென்று = எதிராசாவென்று, சிந்தியும் = மனஸ்ஸிலே சிந்தியுங்கோள் (யாதாமி அல்பமாட, பலம் அதிகமாயிருக்கும்) (ரு0)

(வ-ம) திருநாமம் அநுஸந்திக்கைக்கு யோக்யமாயிருப்பதான ஸலாக்யமான காலத்தை வ்யர்த்தமேபோக்கி, அஜ்ஞாநத்தாலே ஸம்ஸாரத்திலே பரிப்ரமிக்கிற பாபிகளாயுள்ளவர்களே! ஸர்வகாலத்திலும் ஒருபடிப்பட்டின்று தபஸ்ஸிலே உத்ஸாஹிக்குமவர்களாயிருக்குமவர்களுக்கும் ப்ராபிக்கப்போகாமலிருப்பகாய, (க) "தத் விஷ்ணோ: பரமம் பதம்"- "த்ரக்ஷரே பரமேவ்யோமந்" என்று சொல்லுகிற ப்ருஹிபாவித்திலையுடைத்தா யிருப்பதான வந்தப்பரமபதத்திலே, நித்ய ஸம்ஸாரிகளான வுங்களை யேற்றி நித்யரோடே ஒருகோவையாக்கிவைக்கும் அதுக்குடலாக கீழ்ச்சொன்னவைகாசாவ் கோத்தி யென்னலாம்படி அதிலு மெளிதாயிருப்பதான வெம்பெருமானார் திருநாமத்தை, எதிராசனென்று நீங்கள் மனஸ்ஸிலே சிந்தியுங்கோள் நோத்தியல்பமாய, பலம்திகமாயிருக்கும் நோத்தி=யத்நம் (ரு0)

(அ-கை) இனிஸம்ஸாரிகளிழவைத்தான சொல்லவேணுமோ? உம்முடைய நிலை இருந்தபடியென்னென்று எம்பெருமானார்க்கு நினைவாக, அவர்களோ பாதி அநாதிகாலமெல்லாம் வ்யர்த்தமேபோயிருக்க, அதினிழவின்றிக்கே யிருக்கிறவெனக்கு தேவருடைய க்ருபை யுண்டானபின்பு, தத்லாபக்லேஸமுண்டாயத்தென்று ஸவலாபத்தைப்பேசியருளுகிறார் இழவு=அலாபக்லேஸம்

என்றுள்ளீச னுயிருமன்றேயுண டிக்காலமெல்லாம்
அன்றளவாகப்பழுதே கழிந்த திருவினையால்
என்றிழவின்றி யிருக்கு மென்னெஞ்சமிரவுபகல்
நின்றுதவிக்கு மெதிராசா நீபருவஞ்செய்பக்கினனே. (ருக)

என்றுள்ளன ஈசன = ("நானுன்னை யன்றி யிலேன் கண்டாய் நாரணனே நீ யென்னையன்றியிலை" என்கிறபடியே, ஒழிக்கவொழியாத அவி்நா

(க) ஸ - நாரா

பாவஸம்பந்தம் நித்யமாக வுண்டாகையாலே) நியந்தாவான வீஶ்வரன் எப்படி எப்போதும் நித்யவித்தனாயிருக்கிறானோ? (அப்படியே) உயிரும் = ஈஶித்தவ்யனானவாத்மாவும், அன்றேயுண்டு = அப்போதே உண்டாயிருக்கிறான், இக்காலமெல்லாம் = இவ்வநாதிகாலந்தொடங்கி, இன்றளவாக = இப்போதளவாக, இருவினையால் = புண்யபாபரூபமான ப்ரபலகர்மத்தாலே, பழுதே கழிந்ததென்று = வ்யர்த்தமாகவே போயிற்றென்று, இழவின்றியிருக்கும் = இப்படி இழந்தநாளுக்கு அநுதபியாமலிருக்கிற, என்னெஞ்சம் = அடியேனுடைய மநஸ்ஸு, எதிராசா = எம்பெருமானாரே! நீயருள்செய்த பின்னே = தேவர் விசேஷகடாக்ஷம் பண்ணியருளின பின்பு, இரவுபகல் = அல்லும் பகலும், இன்று = இதிலே யொருப்பட்டு நின்று, தபிக்கும் = பரிதபியாநிற்கும் (௫௧)

(வ-ம) (க) 'நானுன்னையன்றியிலேன் கண்டாய் நாரணனே நீ என்னையன்றியிலை'' என்கிறபடியே, ஒழிக்கவொழியாத வவிநாபாவஸம்பந்தம் நித்யமாகவுண்டாகையாலே, நியந்தாவான ஈஶ்வரன், என்றுதொடங்கி வித்தனாயிருக்கும் அப்படியே, ஈஶித்தவ்யனானவாத்மாவும் அப்ருதக்ஸித்தவிசேஷணமாகையால், அன்றே யுண்டாயிருக்கும் இப்படி யன்றுதொடங்கி தேவர் விஷயீகாரம்பெற்ற வின்றளவாக வுண்டானவென்னுடைய ப்ரபலகர்மத்தாலே ஶேஷஶேஷிஸம்பந்தஜ்ஞாநகார்யமான கைங்கர்யத்துக்கு அடைத்த விந்த அநாதிகாலமெல்லாம் வ்யர்த்தமே போயிற்றென்று இழந்தநாளைக்கு அநுதபியாமலிருக்கிற வென்னுடைய மநஸ்ஸு, தேவர் விஶேஷகடாக்ஷம்பண்ணியருளினபின்பு, திவாராத்ரவிபாக ([illegible]) மற விதிலே யொருப்பட்டு நின்று பரிதபியாநிற்கும் இதென்ன ஸ்வபாவம் ஒரு கர்மபாரவஶ்ய மிருந்தபடியே! இருவினை = புண்யபாபங்களாகவுமாம் (௫௧)

(அ-கை) அநுதாபாதிகளுண்டாகவே, எம்பெருமானாருக்காக, பெரியபெருமாள், ''श्रीमान् समारूढपतत्त्रिराजः- ஸ்ரீமாந் ஸமாரூடபதங்கராஜ:'' என்கிறபடியே எழுந்தருளி யபிமானித்தருளும் பேற்றின கௌரவத்தை அநுஸந்தித்தருளுகிறார்

கனககிரிமேல் கரிய முகில்போல்
வினதைசிறுவன் மேற்கொண்டு—தனுவிடும்போது

(*) ச-திருவ-எ

ஏராரெதிராசராகத் தாம் வென்பால்
வாரா முன்னிற்பர் மகிழ்ந்து (௫௨)

கனககிரிமேல் = ஸ்வர்ணமயமான மஹாமேரு மலையின்மேலே, கரிய முகில்போல் = (படிந்திருக்கிற) நீலமேகம்போலே, வினதை = வினதை யென்னும் ஸ்த்ரீயினுடைய, சிறுவன் = புத்ரனான வைநதேயனை-பெரிய திருவடியை, மேற்கொண்டு = வாஹநமாகக்கொண்டு (கருடவாஹநாரூடராய்) தனுவிடும்போது = சரீரம் விடுகிற ஸமயத்தில், (தாய் முகங்காட்டுமாபோலே) ஏர் = ஸௌந்தர்யாதிகளால், ஆர் = பூர்ணரான, அரங்கர் = பெரியபெருமாள், எதிராசர்க்காக = எம்பெருமானார்க்காக, என்பால் வாரா = அடியேனிருந்த விடத்தே வந்து மகிழ்ந்து = ஹ்ருஷ்டராய், முன்னிற்பர் = முன்னே நிற்பர் இத்தாலென்னக் கபேக்ஷிதமான * முகமும் முறுவலும் காட்டி யநுபவிப்பித்தருளுவர், இது நிச்சயமென்று கருத்து (௫௨)

(வ-ம) (க) „[illegible] —காஞ்சநஸ்ய கிரேஶ்ருங்கே ஸதடித்தோ யதோயதா” என்றும், (உ) “மஞ்சுயர் பொன்மலைமேலெழுந்த மாமுகில்போன்றுளர்” என்றுஞ் சொல்லுகிறபடியே, ஸ்வர்ணமயமான மஹா மேருவின்மேலே (ங) “பெரும்பவ்வமண்டியுண்ட பெருவயிற்றகருமுகிலானது இனி யப்படிந்திருக்குமாபோலே, பரபாகரஸாவஹமாம்படி, விநதை சிறுவனென்னும்படியான பெரியதிருவடிமேல்கொண்டு தேஹபாத ஸமயத்திலே தாய் முகங்காட்டுமாபோலே, ஸௌந்தர்யாதிகளால் பூர்ணரான பெரியபெருமாள் எம்பெருமானாருக்காக நானிருந்தவிடத்தே வந்து ஹ்ருஷ்டராய் முன்னிற்பர் இத்தாலென்னக்கபேக்ஷிதமான முகமும் முறுவலும் காட்டியநுபவித்தருளுவர் இது நிச்சயமென்று கருத்து (௫௨)

(அ-கை) இப்படிப்பெரியபெருமாள் பெரியதிருவடிமேல் கொண்டுவந்து திருமுகப்பரத்தாகம் பண்ணும்படியை யநுஸந்தித்து அதுக்கிடைச்சுவராய் பாபாலுபத்தேஹத்துடன் துஸ்ஸஹமான துக்கங்களை யநுபவித்திருக்க முடியாது ஆகையாலே, ஹிதபரவர்த்தகரான தேவர் ஸகலதுக்காஸ்பதமான ஸம்ஸாரத்தில் நின்றும் அடியேனைச் சீக்கிரமாக உத்தரிப்பித்தருளவேணுமென்கிறார்

---

(க) (உ) தி-மொ ௧௨-௮
(ங) திருநெ-௨௧

இத்தாலே தென்னரங்கர் செய்கின்றதென்றறிந்தே
இருந்தாலும் தற்கால வேதனையின் கனத்தால்
பதைத்து ஆவோ வென்னும் இந்தப் பாவவுடம்புடனே
பலநோவுமநுபவித்து இப்பவத்திருக்கப்போமோ
மதத்தாலே வல்வினையின் வழியுழன்று திரிந்த
வல்வினையேன் றன்னை யுனக்காளாக்கிக்கொண்ட
இத்தாயும் தந்தையுமா மெதிராசா வென்னை
இனிக்கடுக இப்பவத்தினின்று மெடுத்தருளே (ருங)

இத்தாலே = ஹிதபுத்தியாலே, தென்னரங்கர் = பெரியபெருமாள் செய்கின்றதென்றறிந்தே யிருந்தாலும் = க்ருபாபலமாக துக்கங்களை யநுபவிப்பித்தருளுகிறாரென்றறிந்தே யிருந்தாலும், தற்காலவேதனையின் கனத்தால் = அந்தந்த காலத்திலுண்டான வேதனையின் மிகுதியாலே, பதைத்து = துடித்து, ஆவோவென்னும் = அந்த துஸ்ஸஹதையாலுண்டான விஷாதத்தாலே துக்கஸூசகமான ஹா! ஓ! என்கிற சப்தங்களைச்செய்யாநின்ற, இந்த பாவவுடம்புடனே = இந்தப்பாபசரீரத்தோடே, பலநோவுமநுபவித்து = வெகுதுக்கங்களையும் அநுபவித்து, இப்பவத்து = இந்தஸம்ஸாரத்தில், இருக்கப்போமோ = இருக்க ஶக்யமோ? மதத்தாலே = தேஹமதத்தினாலே, வல்வினையின் வழியுழன்று திரிந்த = ப்ரபல கர்மத்தின் மார்க்கத்திலே அதுவே யாத்ரையாய் வர்த்தித்த, வல்வினையேன் தன்னை = மஹாபாபியான வடியேனை, உனக்கு = ஸத்துக்களுக்கு ஸமாஶ்ரயணீயரா யிருக்கிற தேவர்க்கு, ஆளாக்கிக்கொண்ட = அடிமையாக்கிக் கொண்டருளின, இத்தாயும் = ஹிதத்தைச்செய்யும் மாதாவும், தந்தையுமாம் = பிதாவுமாயிருக்கிற, எதிராசா = எம்பெருமானாரே! இனி = தேவர் ஸம்பந்தத்தை யறிந்தபின்பு, என்னை = அடியேனை, கடுக = சீக்ரமாக, இப்பவத்தினின்றும் = இந்த ஸம்ஸாரத்தினின்றும், எடுத்தருள் = எடுத்துக்கரையேற்றி யருளவேணும், (அவர்ஜநீய ஸம்பந்தமடியாக விரைந்துத்தரிப்பித்தருளவேணுமென்று கருத்து) (ருங)

(வ்-ம) (க) "ஆரப்பெருந்துயரே செய்திடினும்" இத்யாதிப்படியே ஹிதபுத்யா பெரியபெருமாள் க்ருபாபலமாக துக்கங்களை யநுபவிப்பிக்கிறாரென்றறிந்தே யிருந்தாலும் அந்தவந்தகாலத்திலுண்டான வேதனையின் மிகுதியாலே துடித்து அந்த துஸ்ஸஹதையாலுண்டான விஷாதத்தாலே துக்கஸூசகமான ஶப்தங்களைச்சொ

(க) ஜ்ஞாநஸாரம்.

ஸஹ்ருதங்க பாபசரீரத்தோடே பஹு துக்கங்களையநுபவித்து துக்காவஹமான இந்த ஸம்ஸாரத்தில் இருக்கும்படியோ? (௧) 'பாவமே செய்து பாவியானேன்" என்கிறபடியே, தேஹத்தாலே பாபகர்மத்தின் மார்க்கத்திலே அதுவே யாத்ரையாய் வர்த்திக்கும் மஹாபாபியான என்னை ஸத்துக்களுக்கு ஆச்ரயணீயராயிருக்கிற தேவர்க்கடிமையாக்கிக்கொண்டருளின ஹிதத்தை நடத்தும் மாதாவும் பிதாவுமாயிருக்கிற தேவர் ஸம்பந்தத்தையறிந்த பின்பு அடியேனைச் சீக்கிரமாக இந்த ஸம்ஸாரத்தில் நின்றும் (௨) [illegible] "யாந்தாரய" என்னும்படி எடுத்துக்கரையேற்றியருளவேணும் அவர்ஜநீயஸம்பந்தமடியாகவிறே, உத்தரிப்பிக்கத் தருளுவரென்று கருத்து (௫௩)

(அ-கை) இப்படி இவர் அபேக்ஷித்தபடியே, எம்பெருமானாரும் இவர் அபேக்ஷிதமெல்லாஞ் செய்வாராக எண்ணியிருக்க, இவர் அதுக்குப் பற்றாமல், (௩) *ஒருபகலாயிரமூழியாய், மீளவும் அவர் தம்மைப் பார்த்து, ஸர்வவிதபந்துவுமாயிருக்கிற தேவர் நானிந்த தேஹத்தோடே இருந்து துக்கப்படாமல் என்றுதான் நலமந்தமில்லதோர் நாட்டிலே சேரும்படி ஏற்றியருளுவதென்கிறார்

இன்னுமெத்தனை நாளிவ்வுடம்புடனே
　　இருந்து நோவுபடக் கடவேனையோ
என்னையிங்கினின்றும் விடுவித்து நீர்
　　என்றுதான் திருநாட்டிலேற்றுவீர்
அன்னையுமத்தனு மல்லாச் சுற்றமும்
　　ஆகியென்னை யளித்தருள் நாதனே
என்னிதத்தை யிராப்பகலின்றியே
　　ஏகமெண்ணு மெதிராசவள்ளலே,　　　(௫௪)

அன்னையும் = ப்ரியத்தைப்பண்ணுகிற மாதாவும், அத்தனும் = ஹிதத்தைப்பண்ணுகிற பிதாவும், அல்லாத சுற்றமும் = மற்றும் அருகமான அசேஷபந்துக்களுமெல்லாம், ஆகி = ஆய், என்னை = அடியேனை, அளித்தருள் = ரக்ஷித்தருளுகிற, நாதனே = ஸ்வாமீ! என் = அடியேனுடைய, இதத்தை = இஷ்டத்தை, இராப்பகலின்றியே = இரவுபகலின்றியே, ஏகமெண்ணும் = ஒருபடி சிந்திக்கிற, எதிராசவள்ளலே = பரமோதாரராய்,

(௧) தி-மொ-க-கூ-கூ　　(௨) ஸாரஞாந்திகத்ரயம்　　(௩) தி-வா-௪௦-க-க.

யதிகளுக்கு நாதரான எம்பெருமானாரே! (தேவருக்கு ஆட்பட்டபின்பும்) இன்னம் = இன்னமும், எத்தனைநாள் = எத்தனைகாலம், இவ்வுடம்புடனேயிருந்து = இந்தத்தேஹத்திலே யிருந்து, நோவுபடக்கடவேன் = வேதனைப்படக்கடவேன் ஐயோ = அந்தோ! என்னை = அடியேனை, இதினின்றும் = பந்தகமான இந்தத்தேஹத்தில் நின்றும், விடுவித்து = முக்தனும்படி பண்ணி, நீர் = தேவர், என்றுதான் = எப்போதுதான், திருநாட்டினுள் = பரமபதத்தில், ஏற்றுவீர் = ஏற்றியருளுவீர், (இதையருளிச்செய்யவேணும்) (௫௪)

(வ-ம்) (௧) "அன்னையாய் அத்தனாய் என்னை யாண்டிடும் தன்மையான்"-என்கிறபடியே, ப்ரியஹிதங்களைப் பண்ணுகிற மாதாபிதாக்களும், மற்றும் முக்தமானவஸ்ஸேஷபந்துக்களுமெல்லாமாய் என்னை ரக்ஷித்தருளுகிற நாதனே (௨) "என்மனமேக மெண்ணு மிராப்பகலின்றியே" என்கிறபடியே, என்னுடைய ஹிதத்தை திவாராத்ரவிபாக(ம)ற வொருபடிச் சிந்திக்கிற பரமோதாரராய், யதிகளுக்கு நாதரானவரே! (௩) 'உனக்காட்பட்டு மடியே னின்னு முழல்வேனோ" என்கிறபடியே தேவருக்கு சேஷபூதனானபின்பு இன்ன மெத்தனை காலமிந்தத்தேஹத்திலே யிருந்து வேதனைப்படக்கடவேன்? ஐயோ! அடியேனை பந்தகமான இந்தத்தேஹத்தில் நின்றும் முக்தனும்படி பண்ணி, என்றுதான் திருநாட்டினுள் ளேற்றியருளுவீர்? அந்நாளுமொருநாளாமோ? வள்ளல் = ப்ரத்யுபகார ரஹிதமாக வுபகரிக்கு முதாரர் (௫௪)

(அ-கை) செய்தவம்சத்தில் க்ருத்யங்களையும் செய்யவேண்டுமம்சத்தில் அபேக்ஷையு மதிகாரிக்கு வேண்டுமொன்றாகையாலே, அந்த க்ருத்யங்களுக்கு ஸாதகமாக எம்பெருமானாருடைய ப்ரஸாதத்தாலே தாம் பெற்றபேறுகளை அநுஸந்தித்து வித்த(ஃ)ராயருளுகிறார்

தென்னரங்கர் சீருக்கிலக்காகப் பெற்றோம்
  திருவரங்கம் திருப்பதியே யிருப்பாகப் பெற்றோம்
மன்னியசீர் மாறன்கலை யுணவாகப் பெற்றோம்
  மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்

---

(௧) கண்ணி-௮ (௨) இ-வாய-௬௩-௭ (௩) இ-வாய ௫-௪ ௧௦

முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம்
முழுதுநமக்கவை பொழுதே போக்காகப்பெற்றோம்
பின்னையொன்று தனில் நெஞ்சுபோகாமற்பெற்றோம்
பிறர்மினுக்கம் பொறாமையில்லாப் பெருமையும்பெற்றோமே

தென்னரங்கர் = தர்சநீயமான கோயிலிலே "அருள்கொடுத்திட்டடியவரை யாட்கொள்வான்" என்பொடு தென்றிசை இலங்கைநோக்கிப் பள்ளிகொண்டருளுகிற பெரியபெருமாளுடைய, சீரருளுக்கு = நிர்ஹேதுக கருணைக்கு, இலக்காகப்பெற்றோம் = லக்ஷ்யமாகப்பெற்றோம், திருவரங்கம் திருப்பதியே = 'தென்னாடும் வடநாடுந்தொழநின்ற திருவரங்கம் திருப்பதி" என்றும் "ஆராமஞ்சூழ்ந்த வரங்கம்" என்றும் "தலையரங்கம்" என்றுஞ் சொல்லுகிறபடியே, அகிலதிவ்யதேச ப்ரதாநமான திருவரங்கம் திருப்பதியே இருப்பாகப்பெற்றோம் = நித்யவாஸஸ்தாநமாகப் பெற்றோம், மன்னிய சீர் = பரபக்த்யாதி கல்யாணகுணங்கள் பொருந்தியிருக்கிற, மாறன் = நம்மாழ்வாருடைய, கலை = தொண்டர்க்கமுதான வகுளபூஷண வாக் அமுதத்தை, உணவாகப்பெற்றோம் = அந்நமாக புசிக்கப்பெற்றோம், மதுரகவி = 'தேவுமற்றறியேன்" என்றருளிச்செய்த மதுரகவியாழ்வாருடைய, சொற்படியே = திவ்யஸூக்திப்படியே, நிலையாகப்பெற்றோம் = 'யதீந்த்ரமேவ நிரந்தரம் நிஷேவே தைவதம்பரம்' என்றும், 'உன்னையொழியவொருதெய்வமற்றறியா மன்னுபுகழ்சேர் வடுகநம்பி தன்னிலையை' என்றும், நாமும் நம்முடையாரும் பேசும்படியான சரமபர்வ நிஷ்டையே நிஷ்டையாகப்பெற்றோம், முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப்பெற்றோம் = தத்ப்ரதிபாதகங்களான நம்முடைய பூர்வாசார்யர்களுடைய திவ்ய ஸூக்திகளான ரஹஸ்யங்களை ஆந்தரமாக வநுஸந்திக்கப் பெற்றோம், முழுதும் நமக்கவைபொழுதே போக்காகப்பெற்றோம் = அதில ஆதராதிசயத்தையுடைய நமக்கு மற்றொன்றில் பொழுதுபோக்காமல் முழுதும் அவற்றையே காலக்ஷேபமாகப் பெற்றோம், பின்னை = இப்படியான வநந்தரம், ஒன்றுதனில் = தத்இதர க்ரந்தங்களிலொன்றிலும், நெஞ்சுபோகாமல் பெற்றோம் = மநஸ்ஸஞ்சலியாமல் இதிலே ப்ரதிஷ்டிதமாம்படி யிருக்கப்பெற்றோம், பிறர்மினுக்கம் பொறாமையில்லா = இதெல்லாமொருதட்டும் தானொரு தட்டுமாயிருக்குமதாய், "இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமறிந்துவுகந்திருக்கையும்" என்னும்படி அரிதாயிருப்பதான பரோத்கர்ஷங்கண்டால் அஸஹிஷ்ணுதையில்லாத, பெருமையும் பெற்றோமே = மஹத்த்வத்தையும் லபித்தோமே? இதொரு மஹாலாபமிருந்தபடியே! என்று வியந்தருளுகிறார் (உள்ளுகை = விசாரிக்கை) (௫௫)

(வ-ம்) தர்ஶநீயமான கோயிலிலே (௧)* அருள்கொடுத்திட்டடிய வரையாட்கொள்வாராய் (௨)* அன்பொடு தென்திசைநோக்கிப் பள்ளிகொண்டருளுகிற பெரியபெருமாளுடைய நிர்ஹேதுகக்ருபைக்கு லக்ஷ்யமாகப்பெற்றோம், (௩) "தென்னாடும் வடநாடுந்தொழநின்ற திருவரங்கத்திருப்பதி" என்றும், (௪) "ஆராமஞ்சூழ்ந்தவரங்கம்" என்றும், (௫) "தலையரங்கம்" என்றுஞ் சொல்லுகிறபடியே, அகிலதிவ்யதேசப்ரதானமான திருவரங்கத்திருப்பதியே, நித்யமாக வாஸஸ்தானமாகப் பெற்றோம், பரபக்த்யாதிகல்யாணகுணங்கள் பொருந்தியிருக்கிற வாழ்வாருடைய தொண்டர்க்கமுதான வருள் பூஷணவாக்கம்ருதத்தை அம்ஶமாகப் புஜிக்கப்பெற்றோம்

(௬) "தேவுமற்றறியேன்" என்கையாலே, அவர்களைச் சிந்தித்திருப்பாரென்னும்படியான மதுரகவிகளுடைய திவ்யஸூக்திப்படியே 'యస్మింద్రిమేవ నీరంధ్రం నిష్కే శ్వసతం పరమ్-யதீந்த்ரமேவ ரங்கதாம விஷேவேதைவதம்பரம்" (௭) 'உன்னையொழிய ஒருதெய்வம் மற்றறியாமன்னுபுகழ்சேர் வடுகநம்பி தன்னிலைமை" என்றும், நாமும் நம்முடையாரும் பேசும்படியான சரமபர்வநிஷ்டையே நிஷ்டையாகப் பெற்றோம் தத்ப்ரதிபாதகங்களான நம்முடைய பூர்வாசார்யர்களுடைய திவ்யஸூக்திகளான ரஹஸ்யங்களை (௮) "நெஞ்சந்தன்னால் தேறலுமாம்" என்னும்படி மேலெழவன்றிக்கே ஆந்தரமாக வநுஸந்திக்கப் பெற்றோம், அதிலாதராதிஶயத்தையுடைய நமக்கு மற்றொன்றில் பொழுதுபோக்காமல் முழுதுமவற்றையே காலக்ஷேபமாகப்பெற்றோம் இப்படியானவங்கீகாரம் தந்த்ராந்தரங்களி லொன்றிலும் மநஸ்ஸு சலியாமல் இதிலே ப்ரதிஷ்டிதமாம்படியிருக்கப் பெற்றோம் இதெல்லாமொருதட்டும், தானொருதட்டுமா யிருக்குமதாய், (௯) "இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமறிந்திருக்கையும்" என்னும்படி அரிதாயிருப்பதான பரோக்ஷராயங்கண்டால் அஸஹிஷ்ணுதையில்லாத மஹத்தையும் லபித்தோமோ? இதொருமஹாலாபம் இருந்தபடியே!, உள்ளுதல்=விசாரித்தல் (௫௫)

---

(௧) பெரி-தி-௫-௯-௩ (௨) பெரு-தி-௧-௧௦ (௩) பெரி-தி ௫-௯-௧௧
(௪) சிறியதிரு. (௫) உ-திருவ-௭௦ (௬) கண்ணி ௨
(௭) ௧௧ (௮) உபதேச. (௯) மு-முக்ஷுப்படி-௨.

(அ-கை) "மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்" என்று தம்முடைய நிலையை வெளியிடாநின்று கொண்டு அதுக்கநு ரூபமாக வவர் திருவடிகளில் கைங்கர்யத்தை யபேக்ஷிக்கிறார்.

உன்றனபிமானமே யுத்தாரக மென்று
சிந்தைதெளிந்திருக்கச் செய்தநீ—அந்தோ
எதிராசா நோய்களாலென்னை நலக்காமல்
சதிராக நின்திருத்தாள் தா. (ருக)

எதிராசா = யதிகளுக்கு நாதரானவரே! உன்றன் அபிமானமே உத்தாரகமென்று = ("ஆசார்யாபிமானமே யுத்தாரகம்" என்கிறபடியே) தேவருடைய அபிமானமே யிவ்வாத்மாவுக் குத்தாரகமென்று, சிந்தை தெளிந்திருக்கச்செய்தநீ = "தெளிவுற்ற சிந்தையர்" என்கிறபடியே, மநஸ்ஸு நிர்மலமாய் தந்நிஷ்டனாயிருக்கும்படி பண்ணியிருக்கும்படி உபகரித்தருளின தேவர், அந்தோ = ஐயோ! நோய்களால் = வேதனைகளால், என்னை = அடியேனை, நலக்காமல் = பாதியாமல், சதிராக = ஸாமர்த்தியமாக, நின் திருத்தாள் = தேவர் திருவடிகளை, தா = ப்ரஸாதித்தருளவேணும். (ருக)

(வ்-ம்) எதிகளுக்கு நாதரானவரே! "ஆசார்யாபிமானமே யுத்தாரகம்" என்கிறபடியே, தேவருடைய அபிமானமே இவ்வாத்மாவுக்குத்தாரகமென்று (க) "தெளிவுற்ற சிந்தையர்" என்கிறபடியே, மநঃப்ரஸாதமுண்டாய், தந்நிஷ்டராயிருக்கும்படி பண்ணி உபகரித்தருளின தேவர், அய்யோ! வேதனைகளாலடியேனை நலக்கேடு பண்ணாமல் (உ) "సుఖేనేమాం ప్రకృతిం స్థూలసూక్ష్మరూపాం విసృజ్య-సాధకే" நேமாம் ப்ரக்ருதிம் ஸ்தூலஸூக்ஷ்மரூபாம் விஸ்ருஜ்ய" என்கிறபடியே. ஸாமர்த்த்யமாக (ங)" உன்பதயுகமா மேர்கொண்டவீடு" என்கிறபடியே தேவர் திருவடிகளை ப்ரஸாதித்தருளவேணும். சதிர்—விரகு. (ருக)

(அ-கை) இப்படி நீர்சொல்லுகிற நிர்ப்பந்தமெல்லாங்கேட்டு, நாம் உம் கார்யம்செய்கைக்கு எந்த ஸம்பந்தப்ராபல்யங்கொண்டு முடருகிறீரென்ன, பிள்ளை திருவடிகளையாஶ்ரயித்த ராஜகுலமாஹாத்ம்யத்தாலே யொருவஸ்து வென்றபிமானித்து, அடியேனுடைய

(க) தி-வாய்-எ-ரு-சக. (உ) ஶரணாகதிகத்யம். (ங) இரா-நூ-

அபராதம் பாராததேவர் (க) "யதீஶ்வர ஶ்ருணு ஶ்ரீமந் க்ருபயா பரயா தவ" என்கிறபடியே, அடியேனுடைய முக்த(௲)ஜல்பிதத்தைச் செவிதாழ்த்துக் கேட்டருளவேணுமென்கிறார்.

தேசிகர்கள்போற்றும் திருவாய்மொழிப்பிள்ளை
வாசமலர்த்தாளடைந்த வத்துவென்று—நேசத்தால்
என் பிழைகள்காணு தெதிராசரே யடியேன்
புன்பகர்வைக் கேளும் பொறுத்து. (௫௭)

தேசிகர்கள் போற்றும் திருவாய்மொழிப்பிள்ளை = தேசிககுல கூடஸ்தரான ஆழ்வாருடைய அசேஷ வ்ருத்தியிலும் அந்விதராய், அதுவேயாத்ரையாய்ச் செய்துகொண்டு போருகையாலே, "செந்தமிழ்வேதத் திருமலையாழ்வார்வாழி" என்று, ஆசார்யர்களாலே மங்களாசாஸநம் பண்ணும்படியான மாஹாத்ம்யத்தை யுடையரான பிள்ளையுடைய, வாசமலர்த்தாளடைந்த = ஸௌகந்த்ய ஸௌகுமார்ய யுக்தமான திருவடிகளை யாஶ்ரயித்த, வத்துவென்று = சேஷத்வாஶ்ரயமான வஸ்துவென்கிற, நேசத்தால் = ஸ்நேஹத்தாலே, என்பிழைகள்காணு = அடியேனுடைய அபராதங்களை தர்ஶியாதே, (அதில் அவிஜ்ஞாதாவா யிருக்கிற) எதிராசரே = எம்பெருமானாரே! அடியேன் = அடியேனுடைய, புன்பகர்வை = அல்பவார்த்தைகளை, பொறுத்து = சீறாமல் ஸஹித்து, கேளும் = ஸாதரமாகத் திருச்செவிசாத்தியருளவேணும். (௫௭)

(வ்-ம்) தேசிககுலகூடஸ்தரான வாழ்வாருடைய வஶேஷவ்ருத்தியிலு மந்விதராய், அதுவேயாத்ரையாய்ச் செய்துகொண்டுபோருகையாலே, "செந்தமிழ்வேதத் திருமலையாழ்வார்வாழி" என்று ஆசார்யர்களாலே மங்களாஶாஸநம் பண்ணும்படியான மாஹாத்ம்யத்தையுடையரானபிள்ளையுடைய ஸௌகந்த்ய ஸௌகுமார்யயுக்தமான திருவடிகளை யாஶ்ரயித்து ஶேஷத்வாஶ்ரயமான வஸ்துவென்கிற ஸ்நேஹத்தாலே அடியேனுடைய வபராதங்களை தர்ஶியாதே, அதில் அவிஜ்ஞாதாவாயிருக்கிற தேவர் அடியேனுடைய தோஷயுக்தமான முக்த(௲)ஜல்பிதத்தைச் சீறாமல் ஸஹித்து நின்று ஸாதரமாகத் திருச்செவிசாத்தியருளவேணும். (௫௭)

(அ-கை) "திருவாய்மொழிப்பிள்ளை வாசமலர்த் தாளடைந்த வத்து" என்கிறமாத்திரமேயோ? அவராலே லப்தஜ்ஞாநனான வெனக்கு த்வத்ஸம்பந்தஜ்ஞாந மில்லையோ வென்கிறார்.

எந்தை திருவாய்மொழிப்பிள்ளை யின்னருளால்
உன்ற னுறவை யுணர்த்தியபின்—இந்தவுயிர்க்
கெல்லாவுறவும் நீயென்றே யெதிராசா
நில்லாத துண்டோ வென்னெஞ்சு. (நிஅ)

எந்தை — "திருமந்த்ரம் மாதாவும், பிதாவாசார்யனு மென்றருளிச் செய்வர்கள்" என்கிறபடியே, எனக்குப்பிதாவான. திருவாய்மொழிப்பிள்ளை = திருவாய்மொழிப்பிள்ளை தம்முடைய, இன்னருளால் = நிர்ஹேதுக க்ருபையாலே, உன்றனுறவை = தேவர் திருவடிகளில் ஸர்வவித பந்துத்வத்தையும், உணர்த்தியபின் = அஜ்ஞாதஜ்ஞாபநம் பண்ணி ரக்ஷித்தருளின வநந்தரம், இந்தவுயிர்க்கு = இப்படியுண்டான ஸம்பந்தத்தையறிந்த விந்த வாத்மாவுக்கு, எல்லாவுறவும் = மந்த்ர ப்ரதிபாத்யமான நவவிதஸம்பந்தமும், நீயென்றே = தேவரென்றே, (அத்யவஸித்து) எதிராசா = எம்பெருமானாரே! என்னெஞ்சு = அடியேனுடைய மநஸ்ஸு, நில்லாததுண்டோ? = நிலைநில்லாதே யிருக்குமதுண்டோ? "தந்தை நற்றாய் தாரந் தனயர் பெருஞ்செல்வ மென்றனக்கு நீயே" என்றும், "அல்லாத்சுற்றமுமாகி" என்றுமன்றோ விருப்பது? (நிஅ)

(வ்-ம்) "திருமந்த்ரம்மாதாவும், பிதாஆசார்யனுமென்றருளிச் செய்வர்கள்" என்கிறபடியே எனக்கு ஜநகரான திருவாய்மொழிப் பிள்ளை தம்முடைய நிர்ஹேதுக க்ருபையாலே, தேவர் திருவடிகளில் ஸர்வவிதபந்துத்வத்தையும் அஜ்ஞாதஜ்ஞாபநம்பண்ணி ரக்ஷித்தருளின வநந்தரம் இப்படி யுண்டானஸம்பந்தத்தை யறிந்த விந்த வாத்மாவுக்கு மந்த்ரப்ரதிபாத்யமான நவவிதஸம்பந்தமும் தேவரென்று அத்யவஸித்து அதில் நிலைநில்லாதே இருக்குமதுண்டோ என்னுடைய மநஸ்ஸு; "தந்தை நற்றாய் தாரந் தனயர் பெருஞ் செல்வமென்றனக்கு நீயே" என்றும், "அல்லாச்சுற்றமுமாகி" என்று மன்றோ விருப்பது. (நிஅ)

(அ-கை) இப்படி தேவர் திருவடிகளில் ஸம்பந்தஜ்ஞானத்தை யுடையவெனக்கு ஹிதபரரான பெரியபெருமாள் பெரியதிருவடியை மேற்கொண்டுவந்து முகங்காட்டமுண்டாக்கித் தாமே மார்க்கச்சிந்தை பண்ணி தேஹவிமோசனம் பண்ணுங்காலாவதியை யருளிச்செய்ய வேணுமென்கிறார்

எந்தைதிருவரங்கர் ஏரார்கருடன்மேல்
வந்து முகங்காட்டி வழிநடத்த — சிந்தைசெய்திப்
பொல்லாவுடம்புதன்னைப் போக்குவதெந்நாள்கொலோ
சொல்லா யெதிராசா சூழ்ந்து (டுக)

எந்தை = அடியேனுக்குத் தந்தையும் தாயுமான திருவரங்கர் = கோயிலையிட்டு நிரூபிக்கும்படியான பெரியபெருமாள், ஏரார்கருடன்மேல் = அழகுநிறைந்த பெரியதிருவடியின்மேல், வந்து = எழுந்தருளி, முகங்காட்டி = சரீரவிஸ்லேஷஸமயத்திலே அடியேனுக் கபேக்ஷிதமான கஸ்தூரி திருநாமத்தையும், முறுவலையுடைத்தான திருமுகமண்டலத்தையுங்காட்டி, வழிநடத்த = அர்ச்சிராதிமார்க்கத்தாலே நடத்திக்கொண்டுபோக, சிந்தைசெய்து = மநநம்பண்ணி, இப்பொல்லா வுடம்புதன்னை = இந்த ஹேயமான தேஹந்தன்னை, போக்குவ தெந்நாள்கொலோ = தேவர்க்காகப் போக்கி யருளுவதெந்தநாளோ? எதிராசா = எம்பெருமானாரே! சூழ்ந்து = (அதை நான் கேட்டிருக்கும்படி) விசாரித்து, சொல்லாய் = அருளிச்செய்தருளீர்

(வ-ம) எனக்குத்தந்தையும் தாயுமாவாராய் கோயிலையிட்டுநிரூபிக்கும்படியான பெரியபெருமாள், (க) *அஞ்சிறைப்புள்பாகரான வாகாரந்தோன்ற ஸௌந்தர்யாதிகளால் மிக்கிருக்கிற பெரியதிருவடிமேல்கொண் டெழுந்தருளி ஶரீரவியோகஸமயத்திலே எனக்க பேக்ஷிதமான கஸ்தூரிதிருநாமத்தையும், (உ) "நலந்திகழ்முத்தவெண் ணகைசெய்யவாய்" என்று முறுவலை யுடைத்தான ஒளிமதிசேர் திருமுகத்தையுங்காட்டி யநுபவிப்பித்து (ங) * அரங்கத்துறையு மின்துணைவனுந்தாம் அர்ச்சிராதிமார்க்கத்தாலே கொண்டுபோய

(க) திருமொ ௬ ௬ (உ) பெரு-தி உ-எ (ங) தி-மொ-

தன்றோ? (அதெப்படியென்னில்) நற்றாதை = நிருபாதிகபிதாவினுடைய, சொம் = சொத்துக்கள், தாயமுறைதான் (दाय) தாயப்ராப்தியாலே, புதல்வர்தமதன்றோ = புத்ரனுக்காகவேயன்றோ விருப்பது? (ஆகையாலே நம் ப்ராப்திக்கு நாமே யத்நிக்கவேண்டா) எல்லாம் ஸித்தமாகவே யன்றோ இருக்கிறது? இனி அவரிடத்திலே ந்யஸ்தபரராயிருக்குமத்தனை

ஆக இத்தால் உபயவிபூதியையும் பெரியபெருமாளாலே பெற்றுடையராய், அத்தாலே “ஸ்ரீவிஷ்ணுலோக மணிமண்டபமார்க்கதாயி” யாய், ப்ரபந்ந ஜநகூடஸ்தராயிருக்கிற வெம்பெருமானார் திருவடிகளிலே ருசிகார்யமாக, யதீந்த்ரப்ரவணரான ஜீயர் பண்ணியருளின ப்ராப்ய ப்ரார்த்தனை, அவரபிமாநாந்தர்பூதரெல்லார்க்குமாய், அத்தாலே எம்பெருமானார் ப்ரஸாதத்தைப்பெற்று நித்யவிபூதியான பரமபதத்திலே நிரந்தரபகவதநுபவகைங்கர்ய நிரதராய் வாழப்பெறுவார்களென்று ஆர்த்தருக்குச் சொல்லித் தலைக்கட்டியருளிற்று (௬௦)

(வ-ம)(க) “ద్వయమర్థానుసన్ధానేనసహ సదైవంవక్తా యావచ్ఛరీరపాతమత్రైవ శ్రీరఙ్గే సుఖమాస్వ-த்வய மர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதைவம் வக்தா, யாவச்சரீரபாதமத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ” என்றருளிச்செய்து, அநந்தரம், “శరీరపాతసమయేతు ஸரீரபாதஸமயேது” என்று தொடங்கி ‘నిత్యకింకరో భవిష్యసి, మా తేభూదత్రసంశయః-ఇతి మయైవహ్యుక్తమ్-అతస్త్వం తత్త్వతో మత్ జ్ఞానదర్శనప్రాప్తిషు నిశ్శంసయస్సుఖమాస్వ-நித்யகிங்கரோ பவிஷ்யஸி, மாதே பூதத்ரஸம்ஶய:-இதி மயைவஹ்யுக்தம்-அதஸ்த்வம் தத்வதோ மஜ்ஜ்ஞாநதர்ஶநப்ராப்திஷு நிஸ்ஸம்ஶயஸ்ஸுகமாஸ்வ” என்னுமளவாக தேஹபாதந்தொடங்கி கைங்கர்யபர்யந்தமாக வுண்டானபேறுகளெல்லாம், நாமே தலைக்கட்டித்தருகிறோமென்று, பெரியபெருமாள் நமக்கு ஜநகரான எம்பெருமானார்க்கு வழங்கியருளினவர்த்தத்தை நிரூபிக்கில், அவர்க்கவர் ஜநகரான நம்தன்றோ மநஸ்ஸே!,

அதெப்படியென்னில்,-நிருபாதிகபிதாவானவன் ஸ்வம் தாயப்ராப்தியாலே புத்திரனுக்காயே யன்றோயிருப்பது? ஆகையாலே நம்ப்ராப்திக்கு நாமே யத்நிக்கவேண்டா? எல்லாம் ஸித்தமாயே யன்றோ யிருக்கிறது? இனி அவரிடத்திலே ந்யஸ்தபரராயிருக்குமத்

(க) ஶரணாகதிகத்யம்

தனை. ஆகவித்தால் உபயவிபூத்யைஸ்வர்யத்தையும், பெரியபெருமாளாலே பெற்றுடையராய், அத்தாலே "ஸ்ரீவிஷ்ணுலோகமணிமண்டபமார்க்கதாயீ-ஸ்ரீவிஷ்ணுலோக மணிமண்டபமார்க்கதாயிபாய், ப்ரபந்நஜநகூடஸ்தராயிருக்கிற வெம்பெருமானார்திருவடிகளிலே ருசிகார்யமாக, யதீந்த்ரப்ரவணரான ஜீயர்பண்ணியருளின ப்ராப்யப்ரார்த்தனை-அவரபிமாநாந்தர்ப்பூதரெல்லார்க்குமாய், அத்தாலே எம்பெருமானார் ப்ரஸாதத்தைப்பெற்று, நித்யவிபூதியிலே நிரந்தரபகவதநுபவகைங்கர்யநிரதராய் வாழப்பெறுவார்களென்ற வர்த்தஞ்சொல்லித் தலைக்கட்டிற்றாயிற்று.

எதிராசா! எதிராசா! என்று ஸம்போதிக்கிறதெல்லாம் தமக்குமவர்களோடொத்த ப்ராப்தியுண்டாகையாலும், "யஸ்ய யஸ்ய ஸ்ப்ருஹ ஸ்யு:-யதயப்பா த்தஸத்வா:" என்கிறபடியே யதிகளுக்கு நாதரா கைபாலும், அத்தையடிக்கடி யாதரித்தருளிச்செய்கிறார்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

பிள்ளைலோகம் ஜீயரருளிச்செய்த

ஆர்த்திப்ரபந்தவ்யாக்யானம் முற்றிற்று,



## மணவாளமாமுனிகள வாழிதிருநாமம

இபபுவியிலரஙகேசாக கீடளிததானவாழியே
எழிலதிருவாயமொழிபபிளளை யிணையடியோனவாழியே
ஐபபசியில திருமூலதத தவதரிததானவாழியே
அரவரசபபெருஞசோதி யனநதனெனறும வாழியே
எபபொழுதும ஸ்ரீசைலமேததவநதோன வாழியே
ஏராருமெதிராச ரெனவுதிததான வாழியே
முபபுரிநூல மணிவடமும முககோல தரிததான வாழியே
மூதரியமணவாள மாமுனிவனவாழியே

## நாளபாடடு

செநதமிழவேதியா சிநதைதெளிநது சிறநதுமகிழநதிடுநாள
சீருலகாரியா செயதருணமறகலை தேசுபொலிநதிடுநாள
மநதமதிபபுவி மானிடாதஙகளை வானிலுயாததிடுநாள
மாசறுஞானியா சேரெதிராசாதம வாழவுமுளைததிடுநாள
கநதமலாபபொழில சூழகுருகாதிபன கலைகள விளஙகிடுநாள
காரமாமேனி யரஙகநகாகசிறை சணகள களிததிடுநாள
அநதமிலசீா மணவாளமுனிபபா னவதாரஞ செயதிடுநாள
அழகுதிகழநதிடு மைபபசியிற றிருமூலமதனிநாளே